


கல்விக்கண் திறக்கும் கலசலிங்கம்!

+ 16 ஸ்பெஷல் பக்கங்கள்

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்லைடா...ஸ்மார்ட்டா...

KALKI • 24.05.2009 • ரூ.10.00 • 112 பக்கங்கள்



வரலாற்று நாயகன்

ரீடர்ஸ் ஸ்பெஷல்

## ராகு(ல்) காலம்?



" 'ராகிங்'கா... டிஸ்மிஸ் செய்!"

- ஆர்.கே. ராகவன்


பாசன் நகர்
பாசன் புரம்
இடி சிரிப்ஸ்
"தலைவர் பேரு வரலாறுல இடம் பிடிக்குமா?"
"அவரு வளைச்சுப் போட்டிருக்கும் நிலங்களைப் பார்த்தா புவியியல்லயே இடம் பிடிக்கும்!"
வி.விஷ்ணுகுமார்

# சினி சிப்ஸ்



ஒரே மேடையில் பத்துப் படங்களின் துவக்க விழாவையும் நடத்தி, ஆந்திரத் திரையுலகையே சற்று ஆட்டம் காண வைத்திருக்கிறது ஆதித்யராம் மூவிஸ். விரைவில் தமிழிலும் இதுபோல அதிரடி பண்ண திட்டம் இருக்குதாம். ஆதித்யராம் ஸ்டுடியோவில்தான் தசாவதாரம் சுனாமி காட்சி படமாக்கப்பட்டதாம்.

***(அப்ப தயாரிப்பாளர் சுனாமின்னு சொல்லுங்க!)***

**எம்.**ஜி.ஆரால் வாழ்ந்த பலர் அவரை மறந்து விட்ட நிலையில், தயாரிப்பாளர் நம்பிராஜன், எம்.ஜி.ஆர். பெயரில் அதிநவீன ஸ்டுடியோ ஒன்றை சாலிகிராமத்தில் நிர்மாணித்து வருகிறாராம். அநேகமாக எல்லா டிபார்ட்மெண்டும் டிஜிட்டல் மயமாம்!

***(இதுதான் டிஜிட்டலில் செதுக்கிய ஸ்டுடியோவா...?)***

**து**ப்பாக்கியும் கையுமாக அலைகிறார் புன்னகை இளவரசி சினேகா. காரணம், விஜய சாந்தி ஐ.பி.எஸ். படத்தின் ரீமேக்கில் அம்மணி தான் ஐ.பி.எஸ்ஸாம். அதனால் அவர் நலம் விரும்பிகளையெல்லாம் ஓடவிட்டுச் சுட்டுப் பழகுகிறாராம்!

***(மெய்யாலுமே பொய்த் துப்பாக்கி தானே?)***

**'அ**லிபாபா' படத்தின் ஹீரோ கிருஷ்ணா, இப்போது 'கற்றது களவு' படத்தில் நடிக்கிறார். கூட ஜோடி போடுவது விஜயலட்சுமி. கிருஷ்ணா, இயக்குநர் விஷ்ணுவர்த்தனின் (பில்லா புகழ்) தம்பி. விஜயலட்சுமி அகத்தியன் (காதல் கோட்டை புகழ்) மகள்.

***(நல்லா இருக்கே காம்பினேஷன்)***

திண்டுக்கல் சாரதி படத்தில் ஹீரோவாக நடித்த கருணாஸ், இன்னொரு படத்திலும் கதா நாயகனாக நடிக்கிறார். திண்டுக்கல் சாரதி படத்தின் வசனகர்த்தாதான் இந்தப் படத்தின் இயக்குநராம். படத்தின் பெயர் 'அம்பாசமுத்திரத்து அம்பானி'.

*(ஊர் ஊருக்கு இப்போ ஹீரோ நீங்கதானா?)*

மீண்டும் களத்தில் குதித்துவிட்டார் தயாரிப்பாளர் ஆர்.பி.சௌத்ரி. சீமான், பூபதிபாண்டியன் இருவரிடமும் உதவியாளராக இருந்த திரைவாணன் இயக்கத்தில் தம் மகன்கள் ஜீவா, ரமேஷ் இருவருக்கும் தலா ஒரு படமாம்.

*(சரியான அப்பா, சபாஷ் மகன்கள்!)*

'மோதி விளையாடு' படத்துக்காக முதன் முதலாக, சொந்தக் குரலில் டப்பிங் பேசி நடித்திருக்கிறார் 'உன்னாலே உன்னாலே' வினய். 'துளு' அவருக்குத் தாய்மொழியாக இருந்தாலும், தமிழில் பேசுவதற்குச் சிரமமே இல்லையாம்!

*(எல்லாருக்குமே கைகொடுக்கும்... அதான் 'தமிழ்')*

எல்லாவற்றையும் வித்தியாசமாகச் செய்யும் ரா.பார்த்திபனின் அடுத்த படத்தின் பெயர் வித்தகன். கூலான ஏ.ஸி.யாக நடித்திருக்கிறாராம் பார்த்திபன். வித்தகனை செவன்த் சேனல் தயாரிக்க, பார்த்திபனே இயக்கினாலும் இயக்கலாமாம்!

*(வித்தகன் விறுவிறுப்பா இருந்தா சரி!)*

**கல்கி ஷோகேஸ்**

இந்த வாரம்: கலசலிங்கம்பல்கலைக்கழகம்

(பக்கம் 49 - 64)

நீங்களும் ஷோகேஸ் பகுதியில் இடம்பெற தொடர்பு கொள்ளுங்கள்:
www.kalkigroup@kalkiweekly.com/
www.marketing@kalkiweekly.com

**◆நியூஸ் பாய்◆**



# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: சீதா ரவி

உதவி ஆசிரியர்கள்: கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு: எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி: 044 - 4343 8888 (30 lines)

தொலைநகல்: 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு: kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு: marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு: subscription@kalkiweekly.com

பிற தகவல்கள்: info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

போர்க்களத்தில் ஒரு தளபதி, எதிரணித் தளபதிகளின் புஜ.பல, பராக்கிரமங்களைப் புகழ்ந்து பேசினால் அவரது படையிலுள்ள தளபதிகள் விரக்தியடைந்து, வேதனையடைவது இயல்பு. அதுபோன்று அமைந்துவிட்டது ராகுல் காந்தியின் சமீபத்திய கருத்து. நான்காவது கட்டத் தேர்தலுக்கு முன்பு தில்லியில் பத்திரிகையாளர்களைச் சந்தித்தார். ''தேர்தலுக்குப் பிறகு மேலும் சில கட்சிகளுடன் கூட்டுச்சேரும் வாய்ப்பு இருக்கிறது'' என்று கூறியதுடன், நிதிஷ் குமாரையும், சந்திரபாபு நாயுடுவையும் ஓஹோவென்று புகழ்ந்தார்! அது மட்டுமல்லாமல் நிதிஷ் குமார், ஜெயலலிதா போன்றோருடன், தேர்தலுக்குப் பிறகு

**பாரதத்தின் சிக்கலான பிரச்னைகளைப் புரிந்துகொள்ளும் அளவுக்கு ராகுல் இன்னும் பக்குவப்படவில்லை. ஆனால் அவரை, சுயநலம் காரணமாக முன்னணிக்குக் கொண்டுவரத் துடிக்கிறார்கள்**

கூட்டணி வைத்துக்கொள்ள வாய்ப்பு உள்ளது என்ற தொனியில் பேசினார். அதேமூச்சில், ''மன்மோகனுக்கு மீண்டும் இடதுசாரிகள் ஆதரவு தருவார்கள்'' என்று ராகுல் கருத்து தெரிவிக்க, பொங்கி எழுந்து



* தமிழருவி மணியன்

சாடினார் மம்தா பானர்ஜி. ராகுல் காந்தியின் இந்த அரைவேக்காடு பேச்சுக்கள் குறித்த தமது அதிருப்தியை, மீடியா வெளிச்சம் படாதவாறு காங்கிரஸ் தலைமையிடம் கருணாநிதி பதிவுசெய்ததாகத் தெரிகிறது.

வேறு யாராவது இதுபோன்ற கருத்துக்களைத் தெரிவித்திருந்தால் அன்றே அவரை கட்சியிலிருந்து ஓரம்

கட்டியிருப்பார்கள். ஆனால், ராகுல் புகழ்ந்த நிதிஷ்குமாரை, மறுநாள் வீரப்ப மொய்லி மட்டம்தட்டிப் பேசியதால் மீடியா பிரிவு தலைவர் என்று பொறுப்பு மொய்லியிடமிருந்து பறிக்கப்பட்டது!

இந்தச் சம்பவங்கள், காங்கிரஸின் கண்மணியான ராகுல் காந்திக்கு இருக்கும் செல்வாக்கையும் ஆதிக்கத்தையும்தான் உணர்த்துகின்றன! தாம் பிரதமர் பொறுப்புக்கு இன்னும் தயாராக இல்லை என்று ராகுல் காந்தியே தெரிவித்தபோதிலும், அவரை இன்று இல்லாவிட்டாலும் நாளை பிரதமராக்கி அழகு பார்க்கும் வேகம் காங்கிரஸில் இருக்கத்தான் செய்கிறது!

ராஜீவ் காந்தி இறந்தபோது ராகுலுக்கு வயது இருபது. தில்லி செயிண்ட் ஸ்டீபன் கல்லூரியிலிருந்து, அமெரிக்காவில் உள்ள ஹார்வர்டு பல்கலைக்கழகம் சென்று பின்னர் லண்டன் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தின் கீழமைந்த டிரினிடி கல்லூரியில் ஆராய்ச்சி (எம்.ஃபில்) பட்டமும் பெற்றிருக்கிறார் ராகுல்.

ஆனால் இவர் ஆராய்ச்சிப் பட்டம் பெறவில்லை என்று சமீபத்தில் ஒரு பத்திரிகை செய்தி வெளியிட்டது. உடனே கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் அதை மறுத்து ராகுல் ஆராய்ச்சிப் பட்டம் பெற்றவர் என்று அறிக்கை வெளியிட்டது.

1999ல் மீண்டும் இந்தியா வந்த ராகுல், மும்பையில் ஒரு கன்ஸல்டன்ஸி நிறுவனம் நடத்தினார். 2004ல் அமேதி தொகுதியில் நின்று வென்றவரிடம், காங்கிரஸின் பொதுச்செயலாளர், காரியக் கமிட்டி உறுப்பினர் என்று பொறுப்புகள் சுலபமாக, தங்கத்தட்டில் வைத்துக் கொடுக்கப்பட்டன.


● சோலை

# ராகு(ல்) காலம்?

நேரு குடும்பத்துத் தலைமையே காங்கிரஸுக்கு ஆதரவான வாக்கு வங்கியைக் கொண்டு வரும் என்ற சுயநலம் காரணமாக, காங்கிரஸ்காரர்கள், ராகுலைப் பிரதமராக்கி அழகுபார்க்க ஆசைப்படுகிறார்கள். ஆனால் அவரோ, ''மன்மோகன் மட்டுமே பிரதமர் பொறுப்புக்குத் தகுதியானவர்'' என்று சொல்லி விட்டார்.

''ராகுல் காந்தி அடிமட்ட மக்களின் மீது அக்கறை காட்டுவது போலவும், ஜனநாயக மரபுகளின் மீது நம்பிக்கை கொண்டவர் போலவும் தோற்றம் தருகிறார். ஆனால், பன்முகத் தோற்றம் கொண்ட நமது பாரதத்தின் சிக்கலான பிரச்னைகளைப் புரிந்துகொள்ளும் அளவுக்கு ராகுல் இன்னமும் பக்குவப்பட

வில்லை. ஆனால் அவரைத் தங்கள் சுயநலம் காரணமாக, முன்னணிக்குக் கொண்டுவரத் துடிக்கிறார்கள் காங்கிரஸ் காரர்கள்'' என்கிறார் தமிழருவி மணியன்.

அதை மறுக்கிறார் காங்கிரஸ் ஸீனியர் பிரமுகரான பீட்டர் அல்போன்ஸ். ''நேரு குடும்பத்தினரைவிட மக்களின் மேல் அக்கறை கொண்டவர்கள் இருக்க முடி யாது. அந்தவகையில் நாட்டு மக்களின் மேல் பாசத்தைப் பொழிகிறார் ராகுல். மக்கள் பிரச்னைகளை நன்கு உள்வாங்கிக் கொள்ளும் வகையில் பயணம் மேற் கொண்டு பாரதத்தைப் புரிந்துகொள்ள முயன்று வருகிறார். அவர் எவ்வளவு கால அவகாசம் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளட்டும். ஆனால், பிரதமர் பதவிக்கு அவர், தம்மைத் தயார்ப்படுத்திக்கொள்ள வேண்டும் என்றே நாங்கள் விரும்புகிறோம்'' என் கிறார் பீட்டர்.

''இன்னமும் பக்குவமடையாமல் இருக்கிறார் ராகுல். தேர்தல் நடந்து கொண்டிருக்கும் போதே, சர்ச் சையைக் கிளப் பும் கருத்துக் களைச் சொன்ன திலிருந்தே இதை நாம் புரிந்துகொள்ளலாம். தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸின் எதிர்காலமே கேள்விக் குறியாக மாறப்போகும் நிலையில், ராகு லின் எதிர்காலமும் கேள்விக்குறி தானே?'' என்கிறார் அரசியல் விமர்சகர் சோலை.

இந்தச் சூழலில், சமீபத்தில் மன் மோகன் சிங்கே, ''நல்ல பிரதமராவதற்கு எல்லா தகுதிகளும் ராகுல்காந்தியிடம் இருக்கின்றன'' என்று ஒரு போடு போட்டார்! வாய்ப்பு கிடைத்தால் அவரை அந்த உயர்ந்த பதவியில் கொண்டு வைக்க காங்கிரஸ் தயாராகிவிட்டது என்பதுதான் மன்மோகன் சிங்குடைய பேச்சின் மெஸேஜ்!

39 வயதான ராகுல், அரசியல் எதிர்



**ராகுல் புகழ்ந்த நிதிஷ்குமாரை, மறுநாள் வீரப்பமொய்லி மட்டம் தட்டிப் பேசியதால் மீடியா பிரிவு தலைவர் என்ற பொறுப்பு மொய்லியிடமிருந்து பறிக்கப்பட்டது.**



✱. பீட்டர் அல்போன்ஸ்

காலத்துக்காக தமது ஸ்பானிஷ் காதலி வெரோனி காவை திருமணம் செய்து கொள்வதைக்கூட தள்ளிப் போட்டுக் கொண்டு வருகிறார் என்னும் செய்தி உலவுகிறது. சோனியாவின் இத்தாலி யப் பின்னணி அவரது அரசியல் வாழ்க்கை யில் ஒரு ஸ்பீட் பிரேக்கராக இருப் பதை உணர்ந்து, ராகுல் எடுத்த முடிவு இது என்கிறார்கள்.

"ஐக்கிய முன் னணி அரசின் ஐந் தாண்டு சாதனைகள் மீண்டும் ஆட்சி அமைக்க உதவாது என்பதால்தான் நிதிஷ் குமார், சந்திரபாபு நாயுடு, ஜெயலலிதா ஆகியோருக்கு மறைமுக அழைப்பு விடுத்திருக் கிறார் ராகுல்காந்தி. தப்பித் தவறி மீண்டும் காங்கிரஸ் தலைமையில் ஆட்சி அமைந்தாலும், ஓர் இடைக் கால ஏற்பாடாகத்தான் மன்மோகன் பொறுப்பேற்பார். அதற்குப் பிறகு ராகுலி டம் ஒப்படைத்து விடுவார்கள்'' என்று கருத்து சொல்கிறார், அரசியல் கட்டுரை யாளர் பழ.கருப்பையா.

ஆனால், காங்கிரஸே விரும்பினாலும் ராகுலைப் பிரதமராக்குவது அவ்வளவு சுலபமான விஷயமல்ல என்பதுதான் யதார்த்த நிலை. காரணம், காங்கிரஸ் கூட் டணிக் கட்சிகளில் பிரதமர் பதவி மீது கண் வைத்திருப்பவர்கள் அதை அனுமதிக்க மாட்டார்கள். குழப்பம் வரும்; ஆட்சி கவிழும். ராகுலை இடை யூறின்றிப் பிரதமராக அமர்த்தும் அளவுக்கு காங்கிரஸுக்கு மெஜாரிட்டி கிடைக்கும் வாய்ப்பு கள் இப்போதைக்கு இல்லை. காங்கிரஸ் கூட் டணி ஆட்சி அமையு மானால் அதிலே ராகுல்காந்திக்கு ஓர் முக்கிய அமைச்சர் பொறுப்பு தரப் படும் என்று எதிர் பார்க்கலாம். பழ.கருப்பையா வின் அனுமானப் படி, ஓர் இடைக் கால ஏற்பாடாக மட்டும் மன்மோகன் சிங்கைப் பிரதம ராக்கிவிட்டு, பின்னர் அவர் இடத்தில், ராகுல் காந்தியைத் திணித்தால், அந்த முடிவு இந்தியாவுக்கான 'ராகு'காலமாக மாறிவிடும் அபாயம் இருக் கிறது! கிராமப்புறக் குடிசை வீடுகளில் நுழைந்து குழந்தைகளைக் கொஞ்சுவதும் கஞ்சி குடிப்பதும் ராகுல்காந்தியின் ஆர்வத் தையும் எளிமையையும் உணர்த்தலாம். ஆனால், இந்தியத் தலைமையை ஏற்க அவை மட்டும் போதாதே!

**காங்கிரஸே விரும்பினாலும் ராகுலைப் பிரதமராக்குவது அவ்வளவு சுலபமான விஷயமல்ல என்பதுதான் யதார்த்த நிலை.**

- **ப்ரியன்**

# குண்டாகும் லக்!

கலெக்டர் ஆகும் கனவுடன் ஐ.ஏ.எஸ். தேர்வுக்குத் தயாராகும் ஆர்த்தி, படித்துப் படித்துக் கொஞ்சம் இளைத்துதான் போயிருக்கிறார். ''வருங்கால கலெக்டரே, உங்க ஐ.ஏ.எஸ். லட்சியத்தைப் பற்றிச் சொல்லுங்களேன்'' என்றோம்.

## கலெக்டர் லட்சியம்!

கலெக்டர் ஆகவேண்டும் என்பது என் சின்ன வயதுக் கனவு. அப்பா, அம்மா ரெண்டு பேரும் கவர்ன்மெண்ட் சர்வன்ட்ஸ். அவங்க தர்ற மோட்டி வேஷன்தான் என்னுடைய படிப்புக்கு அடிப்படை. கடந்த வருஷம் எழுதின ஐ.ஏ.எஸ். தேர்வுல இந்திய அளவுல 350வது இடத்துல வந்தேன். நான் பொதுப் பிரிவுல (OC) வர்றதால இன்னும் அதிகமா உழைக்க வேண்டியிருக்கு. என் உடம்பு அளவை விட எனக்குத் தன்னம்பிக்கையின் அளவு அதிகம். கண்டிப்பா ஒரு நாள் ஐ.ஏ.எஸ். ஆகியே தீருவேன்.

**"நினைச்சவுடனே இளைச்சுடலாம் ஆனால், நினைச்சதும் குண்டாக முடியுமா?"**

## மாஸ்டர் பாராட்டு!

'மானாட, மயிலாட' டான்ஸ் போட்டியில் கலந்துக்கிறதுக்கு முன்னாடி 'இந்த உடம்பை வெச்சுகிட்டு டான்ஸ் போட்டியில கலந்துக்கிறயே இது உனக்கே நியாயமா இருக்கா?' என்று ஏகப்பட்ட பேர் கமெண்ட் அடிச்சாங்க. நானும், கணேஷும் சேர்ந்து எடுத்த ரிகர்சல் இந்த கமெண்டுகளுக்கு முற்றுப்புள்ளி வைச்சது. பதினொரு நிமிடம் தொடர்ந்து ஆடின ஜோடி நாங்களாத்தான் இருப்போம். முதல் ரவுண்ட்லேயே வெளியேறப் போற ஜோடி கணேஷ் - ஆர்த்தியாதான் இருப்பாங்கன்னு கமெண்ட் அடிச்ச கலா மாஸ்டரே, எங்களைப் பாராட்டி' பரிசு கொடுத்தது பெருமையான விஷயம்.

## குண்டாக லக்!

குண்டா இருக்கறதுதான் அழகு. ஒல்லிப்பிச்சானா இருக்கறது அழகே இல்லை. ஒரு பெண், குழந்தையா இருக்கும் போது, குண்டாயிருந்தா அமுல் பேபின்னு தூக்கிக்கொஞ்சறாங்க. ஆனா அந்தப் பெண் குழந்தை பெரியவளாகும் போது, குண்டாயிருந்தா பேரண்ட்ஸ் ரொம்பக் கவலைப்படறாங்க. ஏன்னே புரியமாட்டேங்குது. மனசு வெச்சா யார் வேண்டுமானாலும் ஒல்லியாகிவிடலாம். ஆனா என்ன முயற்சி பண்ணினாலும் எல்லோராலும் குண்டாகிவிட முடியாது. குண்டாயிருக்கறதுக்கே ஒரு லக் வேண்டும். குண்டாயிருக்கறவங்களையெல்லாம் பூசணிக்காய், முட்டைக் கோஸ்ன்னு காய்கறிகள் பெயரை வைச்சுக் கூப்பிடுவாங்க. நான் பிறந்த ஊர் ஊட்டி. அதனாலதானா என்னமோ ஊட்டி முட்டைக்கோஸ் மாதிரியே இருக்கேன்.

## டபுள் மீனிங் நோ!

நான் உருவத்தை வைச்சு காமெடி பண்ணினாலும், டபுள் மீனிங் காமெடிக்கு ஒரு போதும் ஒத்துக்கமாட்டேன். அதே மாதிரி யார் கூடவும் ரொம்ப க்ளோஸா நடிக்கிற மாதிரி இருக்கற ஸீன்களைத் தவிர்த்துவிடுவேன். சமீபத்தில் ஒரு பிரபல காமெடியனோடு கட்டிப்பிடித்துப் படியில் உருளவேண்டிய காட்சி. நான் நடிக்க மறுத்துவிட்டேன். டைரக்டரும் சரி என்று ஒப்புக்கொண்டார். படத்தின் டப்பிங் பேச வரும்போது, அதேபோன்று கட்டிப்பிடித்துப் படியில் உருளும் காட்சியிருப்பதைக் கண் டேன். எனக்கு ஷாக் ஆகிவிட்டது. டைரக்டரிடம் கேட்டேன். ''நான் உன்னை வற்புறுத்தவில்லையே. உன்னைப் போல இருக்கும் ஒரு பெண்ணை வைத்து டூப் போட்டு எடுத்தேன்'' என்று கூலாகப் பதில் சொன்னார். இது தான் சினிமா!

## ஆரோக்கிய அங்கீகாரம்

சமீபத்தில் சிங்கப்பூர் வாழ் தமிழர்கள் சிறந்த இளம் வயது நடிகை என்ற விருது வழங்கினார்கள். வெளிநாடு வாழ் இந்தியத் தமிழர்கள், இதுபோன்ற விருதுகளை வழங்கியது என்னுடைய ஆரோக்கியமான காமெடிக்குக் கிடைத்த அங்கீகாரமாக நினைக்கிறேன். மக்களுக்குப் பிடித்த ஆபாசமில்லாத நகைச்சுவைதான் இந்தப் புகழையெல்லாம் எனக்குத் தந்திருக்கிறது என்று நம்புகிறேன்.

**- ராகவ்குமார்**



# யூத் ஏரியா

"அக்னி நட்சத்திரம் என்ன போடு போடுது பார்த்தீங்களா... இதுல எங்க செமஸ்டர் எக்ஸாம் வேற சேர்ந்து கொளுத்துது" என்றபடி அங்கங்கே கல்லூரிச் சாலை மாணவ மாணவிகள் புலம்பிவிட்டு, "என்னதான் வெயிலைச் சமாளிக்க தர்பூஸ், ஐஸ் வாட்டர்னு தஞ்சம் புகுந்தாலும் உங்களைக் கூலா வெச்சுக்கணும்னா எப்பவும் ஜாலியா ஜோக்ஸ் சொல்லிக்கிட்டு, தமாஷ் பண்ணிக்கிட்டு இருக்கணும். எங்களைப் பாருங்க. நாங்க எப்பவுமே, எல்லாத்தையுமே டேக் இட் ஈஸி பாலிஸியாதான் பார்க்கறோம்..." என்று பட்டறையைப் போட்டனர்.

"முதல்ல உங்களை கூல் ஆக்கிக்க ஒரு ஜோக் சொல்றேன் பாருங்க. நேத்து நானும் என் ஃபிரெண்டி (அதாங்க கேர்ள் பிரண்டு) கலாவும் எக்ஸாம்லாம் எழுதி முடிச்சிட்டு கான்டீன் பக்கம் போனோம். என்ன ஆர்டர் பண்ணலாம் கலான்னு நான் கலாய்க்க, அவளுக்கு, 'என்னை'ப் பிடிக்கல, எனக்கும் 'என்னை'ப் பிடிக்கல... சரின்னு எண்ணெய் இல்லாத இஷ்டமான இட்லியை ஆர்டர் பண்ணிச் சாப்பிட்டுட்டு வந்துட்டோம். ஹிஹிஹி..." என பஸ் ஸ்டாண்டு பக்கம் நின்றிருந்த ஒரு மாணவக் கூட்டம் 'எண்ணெயை' ஒரு மாதிரி ஆக்கினர்.

"இருங்க இருங்க அதுக்குள்ள எங்க எஸ்கேப் ஆகப் பார்க்கறீங்க... அழகான குட்டிக்கவிதை ஒண்ணு சொல்றோம். நோட் பண்ணிக்கங்க.

'இந்த உலகத்தில் பல இதயங்கள் துடித்துக் கொண்டிருந்தாலும் உனக்காக மட்டுமே எப்பவும் துடிக்கும் ஒரே இதயம்... எது தெரியுமா என் அன்பே?

அட என் மொக்க மக்கா, உன் இதயம் தாம்ப்பா அது" என்று கவிழ்த்துவிட, 'ஆஹா கவித் கவித அருவியா கொட்டுது' கணக்காகக் கொட்டியது. ஏதோ கோடை மழையில் நனைய முடியவில்லை, மாணவர்கள் புண்ணியத்தில் கவிதை மழையில்

## கத்திரி வெயில்... கலர் ஐஸ்...



நனைந்த சந்தோஷத்தில் மெல்ல நுங்கம் பாக்கம் ரயில் நிலையம் பக்கம் திரும்பி னோம். அங்கே ஐந்தாறு மாணவர்கள் கூடிக் கூடி ஏதோ டிஸ்கஸ் செய்துகொண் டிருந்தார்கள். எக்லாம் பேப்பர்ஸைப் பத்தி இருக்கும் என நாம் கண்டும் காணாமல் நகர, அந்தப் பக்கமாக நின்றிருந்த மாணவி களைப் பார்த்து எகிறி வந்தது ஒரு கமெண்ட்.

"மச்சான்களா, காதலியோட கண்ணசை வுக்கு ஆயிரம் அர்த்தங்கள் இருக்கும்... ஓ.கே.

ஆனால் உங்களோட ஆருயிர் நண் பனின் கண்ணசைவுக்கு ஒரே ஒரு அர்த்தம் தான் இருக்கும்.

அது என்னன்னா, 'சூப்பர் பிகர் வருது டக்குன்னு திரும்பிப் பாரு' '' என சீரிய ஸாக ஒரு மாணவன் மினி லெக்ச்சர் அடிக்க, கத்திரி வெயில், கலர் ஐஸ் கணக்கா ஜில்லிட்டது.

**- நளினி சம்பத்குமார்**

# மொக்க கவிதை...



# ஜாலி ஸ்டோர்ஸ்



கன்னத்துல மை வைச்சுக்கற பாப்பா நான். என்னைப் போய் கையில மை வைச்சு வோட்டு போடச் சொல்றாங்க...



இந்த வாக்காளர்களையெல்லாம் பார்த்தா பாவமா இருக்கு. நான் வோட்டு போடும்போது நிலைமை மாறினா சரி!

## யாருக்கு என்ன பாட்டு!

**கருணாநிதி :** யாரை எங்கே வைப்பது என்று யாருக்கும் புரியலை...

**அழகிரி :** பாண்டியனின் ராஜ்ஜியத்தில் உய்யலாலா...

**வைகோ :** உலகே மாயம்... வாழ்வே மாயம்...

**ராமதாஸ் :** குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்

**கார்த்திக் :** வேர் இஸ் த பார்ட்டி

**சரத்குமார் :** சம்மதமா நான் உங்கள்கூட வர சம்மதா?

**விஜயகாந்த் :** ஒரம்போ.. ஒரம்போ...

**ஜெயலலிதா :** பட்டத்து ராணி பார்க்கும்...

**சிதம்பரம் :** வரவு எட்டணா செலவு பத்தணா...



**மன்மோகன் சிங் :** நீயும் பொம்மை... நானும் பொம்மை...

**ராகுல் காந்தி :** வெற்றி நிச்சயம்...

**லாலுபிரசாத் யாதவ்:** கோ மாதா எங்கள் குலமாதா...

**மாயாவதி :** அம்மா என்றால் அன்பு

**நவீன்பட்நாயக் :** ஜம்புலிங்கமே ஜடாதரா...

- சி.என். ரமாதேவி



- ஆர்.உதய குமா






- பாலாஜி, திருநெல்வேலி

▶ என் பேரை வோட்டர்ஸ் லிஸ்ட்ல கூட இன்னும் சேர்க்கலை. கள்ள வோட்டெல்லாம் போட நான் வரமாட்டேன்: விடுங்க!

▶ எலெக்‌ஷன்லாம் முடிஞ்சிடுச்சு. அப்பாடா இப்போதான் சூடு குறைஞ்சு ரிலாக்ஸ்டா இருக்கு!

# ரீடர்ஸ் ரீமிக்ஸ்

மனிதன் அறிய வேண்டிய ஜீவாத்மா – பரமாத்மா தத்துவத்தை, கிரிக்கெட் விளையாட்டை உவமானமாகக் கொண்டு அருமையாக விளக்கியிருக்கிறார் ஆன்மிகச் சொற்பொழிவாளரான ஸ்ரீ அனந்த பத்மனாபாச்சாரியார்.

1. சத்வ, ரஜோ, தமோ குணங்கள் – மூன்று ஸ்டம்ப்புகள்

2. அகங்காரம், மமகாரம் – பெயில்கள்

3. புண்யம், பாபம் – இரண்டு அம்பயர்கள்

4. கடவுள் – மூன்றாவது அம்பயர்

5. ஐந்து கர்ம இந்திரியங்கள், ஐந்து ஞான இந்திரியங்கள், மனித மனம் – பதினொரு ஃபீல்டர்கள்

6. ஓட்டங்கள் – நற்செய்கைகள்

7. நோ பால்ஸ், வைட்ஸ் – மனிதன் அறியாமல் சேர்த்துக்கொள்ளும் புண்ணியங்கள்

8. சாஸ்திரங்கள் – மட்டை

9. உலக இன்பங்கள் – பந்து

10. உலகியலில் துன்பங்களை எதிர்த்து வெற்றி பெறுபவர் – மட்டையாளர்

11. அணியின் ஆச்சாரியார் – கோச்

– ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்







# கல்கி



2009 மே 24
விரோதி வைகாசி 10
மலர் : 67
இதழ் : 43

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## பிரதிபா பாட்டீலின் பொறுப்பு!

தேர்தல் முடிவுகளில் எப்போதுமே சில அதிர்ச்சிகளும் ஆச்சர்யங்களும் காத்திருக்கும்; அவை இவ்விதழ் வெளியாகும் தினத்தில் நமக்குத் தெரிய வரும். ஆனால், இப்போதே நமக்குத் தெரியவந்துள்ள சில அதிர்ச்சிகரமான செய்திகளைப் பார்க்கையில், தேர்தலுக்குப் பிந்தைய நடப்புகள் குறித்து ஆழ்ந்த கவலை எழுகிறது.

தமிழ்நாட்டில் மட்டுமே நாற்பது சதவிகித வாக்குச் சாவடிகள் வன்முறைக் களங்களாகும் அபாயம் இருப்பதாக அறிவித்துள்ளது தேர்தல் கமிஷன். இவற்றில் கூடுதல் கண்காணிப்பும் வீடியோ காமெரா படப்பிடிப்பும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

மதுரை பகுதி வாக்காளர்களுள் சிலர், "ஆமாம்! பணம் பெற்றுக் கொண்டோம்; ஆனால் அதற்காக தி.மு.க.வுக்கு வாக்களித்துவிட மாட்டோம்" என்றும்; வேறு பலர், "பணம் வாங்கிவிட்டோமே, தி.மு.க.வுக்குத்தான் போடணும்" என்றும் பேசியுள்ளனர்.

வாக்காளர்களை விலைகொடுத்து வாங்குவது கேவலம் என்றால், இன்னொரு பக்கம் வேட்பாளர்களின் சொத்து மதிப்பு கடந்த நாடாளுமன்றத் தேர்தலிலிருந்து இந்தத் தேர்தலுக்குள் அதீதமாகப் பெருகியிருப்பது பெரும் வேதனை. சில தமிழ்நாட்டு உதாரணங்கள்: ஆர்.வேலுவின் சொத்து மதிப்பு 194.06 சதவிகிதமும், தயாநிதி மாறனுடையது 161.16 சதவிகிதமும், டி.ஆர்.பாலுவின் சொத்து மதிப்பு 180.46 சதவிகிதமும் பெருகியுள்ளன. இந்த விவரங்கள் தேர்தல் கமிஷனுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட கணக்கிலிருந்து தெரியவருகின்றன.

நம் நாட்டில், பொதுவாக அரசியல்வாதிகளிடம், சமர்ப்பிக்கப்படாத வருமானக் கணக்குகள் இருப்பதுடன் அயல்நாட்டு (சுவிஸ்) வங்கிகளில் கணக்குகளும் பினாமிகளிடம் சொத்தும் இருப்பது அறிந்ததே!

இந்தப் பின்னணியில்தான் தேர்தல் முடிவுகள் வெளியாகின்றன. வன்முறையும் பண பலமும் விளையாடும் தேர்தல் களத்தில் ஜெயித்து வரும் எம்.பி.க்கள், தேர்தலுக்குப் பிறகான ஆட்சி அமைப்புப் பணியை எவ்வாறு அணுகுவார்கள் என்று சொல்லத் தேவையில்லை. குதிரை பேரத்துக்கான மனக்கணக்குகளும் பதவி பேரத்துக்கான வியூகங்களும் ஏற்கெனவே அவரவர் மனத்தில் போடப்பட்டிருக்கும்.

இச்சூழலில், குடியரசுத் தலைவர் பிரதிபா பாட்டீலின் பொறுப்புதான் மிக அதிகமானது. எந்த ஒரு கூட்டணிக்கும் தனிப் பெரும்பான்மை கிடைக்காத நிலையில், தேர்தலுக்கு முந்தைய கூட்டணி அமைப்புகளைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டு, தேர்தலுக்குப் பிந்தைய மாற்றுக் கூட்டணிகள் உருவாகிற வாய்ப்புகள்தான் அதிகமாகத் தெரிகின்றன. மனசாட்சியும் மனிதர்களும் விலைபோகின்ற இந்த இழிவுக்கு, குடியரசுத் தலைவர் இடமளித்துவிடக் கூடாது. நாடாளுமன்றத்தில் மிக அதிக இடங்கள் பெற்ற ஒரு தனிக் கட்சியையே ஆட்சி அமைக்க அழைக்கவேண்டும்.

இதர கட்சிகளின் ஆதரவுடன் ஆட்சி அமைக்கப்படுகிறபோது, அந்த ஆதரவைக் கொடுப்பதற்காக அமைச்சர் பதவிகளை விலை பேசும் இழிவு மீண்டும் நடந்துவிடக் கூடாது. இதனைக் குடியரசுத் தலைவர் உறுதி செய்வதோ நிர்ப்பந்திப்பதோ மிகவும் கடினம்! ஆனால், கண்டறியப்படும் தவறுகளையும் பகிரங்க குதிரை பேரத்தையும் எதிர்த்து, பிரதிபா பாட்டீல் காட்டும் உறுதியும் சம நோக்கும், எம்.பி.க்களின் பேராசைக்கு முட்டுக்கட்டை போடமுடியும்; நேர்மையான முறையில் அரசு உருவாக உதவமுடியும். ●

# தேர்தல் களம்


நாற்பதும் நமக்குத்தான்...
ஆனா, எதுக்கும் இருக்கட்
டும்னு அவங்க வோட்டு
மிஷினைக் குலைஞ்சதாக
அறிக்கையும் தயார்!


போன தடவை மாதிரியே
ஜெயிச்சுடுவோம், ஆனா
அந்தம்மா நாடகமாடி
மூளைச் சலவை
பண்ணிட்டதாகவும்
அறிக்கை ரெடி!


ஹி.. ஹி...


ஹி... ஹி...




கட்சித் தாவல் தடுப்புச் சட்டம்
ஜனநாயக மரபுகள்
அரசியல் நிர்ணயச் சட்டம்
தேர்தல் சட்டங்கள்
தேர்தல் வழக்குகள்

# வட்டமேஜை

# தெய்வீக மணம்

தேர்தல் பற்றிய ஜோக்குகள் படித்த போது சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

**- அப்துல் காதர், சென்னை - 45**

'அன்னம்மா' சிறுகதை அருமை! தெய்வீக மணம்கமழ்ந்த அன்னம்மாவை ஓவியத்திலாவது நாங்கள் தரிசிக்கும்படி செய்திருக்கலாம் என்பதுதான் ஒரே குறை!

**- அ.கு.கிருஷ்ணன், புதுச்சேரி - 4**

இரண்டு பக்க வட்டமேஜை ஒன்றாகக் குறைந்து, அந்த ஒன்றிலும் பெரிய ஸ்டில் ஏன்?

**- எஸ்.அமிர்தா, வடபழனி**

தி.மு.க. தலைவருக்கு கல்கி வழங்கிய அறிவுரை கலந்த ஆலோசனை செம ஹாட்!

**- வி.எஸ்.மோகன்ராஜ், மணக்குப்பம்**

விஜயகாந்த் படம் சுமாராக இருந்தாலும், உம்ம விமர்சகர் உரிய 'மரியாதை' கொடுத்திருக்கிறார். ஆங்!

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

'பாவம் பாரதம்' கட்டுரை வாசகர்களைத் துன்பத்தில் ஆழ்த்தியது!

**- கே.வி.ராமன், சென்னை - 73**

'கழுமரத்து நிழல்' சிறுகதை ஒரு அருமையான திரைப்படத்தைப் பார்த்தது போலிருந்தது. சிறிது நேரம் 1900 ஆண்டுகளில் வசித்தது போன்ற பிரமையை ஏற்படுத்தித் தந்தது கதை. சபாஷ்!

**- எம்.ஆனந்தி ராஜன், மதுரை**

'தவணைமுறை தற்கொலை' படித்தேன். மூதறிஞர் அறிவுரையையும் மீறி, குடிக்கத் தெரியாதவர்களையும் அதற்குப் பழக்கி, மதிமயங்கிய தலைமுறையை உருவாக்கிய பெருமை, குறளோவியம் கண்ட நம் முதல்வரையே சாரும்!

**- பா.கணேசன், சேலையூர்**

தராசு பதில்களில் தி.மு.க. இளைஞர் அணி செயலாளர் புகழேந்தியின் பேச்சு பற்றி தங்களின் கருத்தைப் பார்த்து அதிர்ந்தேன். மனிதாபிமானமற்ற கொடூரம் என்பது மிக அதிகமான வார்த்தை. அவருக்கு இந்த வார்த்தை சற்றும் பொருந்தாது.

**- உதயா ராஜேந்திரன், சென்னை-83**

# ஓடிக்கொண்டிருக்கும் கோகிலா!

கோகிலாவின் ஊருக்குச் செல்வது
குளத்தி மீன்களின் வாசம் நிரம்பியது
ஆடுமாடுகளின் சாண வீச்சம்
ஓடைக்கரை தாண்டினால் திராட்சைத் தோட்டம்
கோகிலாவின் நடமாட்டமே வாசனைமிக்கது
சிறு வயது திருவிழாக்களில்
பயற்றங்காய்களைப் பச்சையாகத் தின்னும் கோகிலா
பிறந்த கன்றுக்குட்டிபோல இருப்பாள்
வெள்ளாடுகள் விற்ற பணத்தில்
கோகிலாவுக்குக் கல்யாணம்
கணவன் நகரத்தில் கரும்பு வியாபாரி
எனக்கு நீச்சல் கற்றுக்கொடுத்த காலத்தில்
என்னை மூன்று முறை நீரில் முக்கி எடுத்தாள்
கடனில் மூழ்கிய கணவன்
திரும்ப மேலெழவே இல்லை
சில பத்தாண்டுகள் கழித்து
கோகிலாவின் ஊருக்குப் போனேன்
என் காதோர நரையை விடுங்கள்
ஆச்சரியமான அதிசயம் நம்ப மாட்டீர்கள்
அதே வயது கோகிலா
நான் அழைக்க அழைக்க
ஓடிக்கொண்டிருக்கிறாள்!

- பா.தேவேந்திரபூபதி

சிவபக்தனாக மட்டுமே வாழ வேண்டும் எனத் தீர்மானித்த நரஹரி, விட்டலனின் ஆலயத்தைத் தவிர்த்தார். ஆனால் பண்டரிபுர வணிகர்களால் நரஹரியைத் தவிர்க்கமுடியவில்லை. காரணம், அவர் ஓர் அற்புதமான பொற்கொல்லர்.

ஒருநாள் ஒரு வணிகன் நரஹரியிடம் வந்தான். ''பொற்கொல்லரே, பொன்னில் நவரத்தினங்கள் இழைத்த அரைஞாண் ஒன்றைச் செய்து தரவேண்டும். அதுவும் ஒரே வாரத்தில் வேண்டும். நீங்கள் கேட்கும் தொகையை அளிக்கிறேன். ஆனால், நீங்கள் வாக்கு மாறக்கூடாது'' என்றான்.

''நிச்சயம் செய்து தருகிறேன். யாருக்கான அரைஞாண் இது? உங்கள் மகனுக்குத்தானே? இடுப்பை அளவெடுக்க உங்கள் வீட்டுக்கு வரவா?'' என்று கேட்டார் நரஹரி.

''அளவெடுக்க நீங்கள் வரவேண்டியது இந்த ஊரிலேயே மிகப்பெரிய வீட்டுக்கு'' என்றான் வணிகன் புன்னகையுடன். தொடர்ந்து அந்த வணிகன் அளித்த விளக்கம், நரஹரிக்கு அதிர்ச்சியை ஏற்படுத்தியது.

அந்த வணிகனுக்குத் திருமணம் ஆகி பல வருடங்கள் கடந்தும் குழந்தை பிறக்கவில்லையாம். எனவே, அவன் பாண்டுரங்கன் சன்னிதியில் மனம் உருகித் தினமும் வேண்டிக் கொண்டானாம். அந்த வேண்டுதலின் ஒரு பகுதிதான் 'குழந்தை பிறந்தால் பாண்டுரங்கனின் திருவுருவத்துக்கு மேற்படி அரைஞாண் செய்து சமர்ப்பிப்பது' என்பது.

'என்னது நான் வெறுக்கும் விட்டலனுக்கு அரைஞாண் செய்து தருவதா?' நரஹரிக்குச் சினம் பொங்கியது.

'விட்டலனின் கோயிலுக்குள் நான் ஒருபோதும் வரமாட்டேன்' என்று நரஹரி பிடிவாதம் பிடிக்க, கொடுத்த வாக்கை எப்படி மீறலாம் என்று வணிகன் சினம் கொள்ள, இறுதியில் இருவரும் ஓர் உடன்



அருணன் சரண்யா

# கண்கட்டுவித்தை!




படிக்கைக்கு வந்தனர். வணிகன் ஆலயத்துக்குள் சென்று பாண்டுரங்கனின் இடுப்பை அளந்து வர வேண்டும். அந்த அளவின்படி நரஹரி அரைஞாணை உருவாக்க வேண்டும். இதன்படியே ஒரு வாரத்துக்குள் மிக அற்புதமான அரைஞாணை நரஹரி செய்து கொடுத்தார். வணிகன் அதை எடுத்துச் சென்று விட்டலனின் இடுப்பில் அணிவித்தான்.

ஆனால், அரைஞாணின் நீளம் இடுப்பை விட ஆறு விரற்கடை குறைந்திருந்தது. வணிகன் நடந்ததைச் சொன்னான். தொழில் தர்மப்படி அரைஞாணின் நீளத்தை ஆறு விரற்கடை அதிகரித்துத் தந்தார் நரஹரி.

மீண்டும் ஆலயத்துக்குச் சென்று அரைஞாணை அணிவித்த வணிகனுக்கு மீண்டும் திகைப்பு. இந்த முறை அரைஞாணின் அளவு நான்கு

**நரஹரி, யாரைப் பார்க்க மாட்டேன் என எண்ணினாரோ அதே விட்டலன் கண்முன்னே புன்னகைத்தான்!**



விரற்கடை அதிகமாக இருந்தது! வேண்டுதலைச் சரியான முறையில் நிறைவேற்றுவதுதானே நியாயம்? எனவே மீண்டும் நரஹரியை அணுகி அரைஞாணின் அளவை மாற்ற வைத்தான். ஆனால் இம்முறையும் அளவு சரியாக இல்லை.

''ஐயா நரஹரி, தயவுசெய்து விட்டலனின் இடை அளவை நீங்களே வந்து அளந்துகொள்ளவேண்டும்'' என்றான் வணிகன் பணிவாக.

நரஹரியோ காதுகளில் நெருப்புத் துண்டுகள் விழுந்ததுபோல பதறினார். மீண்டும் இருவருக்குமிடையே வாக்கு

## தீராத விளையாட்டு விட்டலன்

அபங்க அமுதம் - 6

தேவா துஜாமீ ஸோனார
துஜே நாமாசா வ்யவஹார
தேஹ பாகேஸரீ
ஜாணே அந்தராத்மா நாம
ஸோனே
த்ரிகுணாசீ கருனி மூஸ
ஆந்த ஓதிலா ப்ரஹ்மரஸ
ஜீவ சிவ கருனி புங்கீ
ராத்ராந்திவஸ டோகாடோகீ
விவேக ஹாதவடா
கேவூன காம க்ரோத கேலா
சூர்ண
மனபுத்தீச் காதரீ ராமநாம ஸோனே
சோரீ
ஞான தாஜவா கேவுன ஹாதீ தோன்ஹீ
அக்ஷரே ஜோகிதீ
காந்த்யா வாஹோனி போதடீ உதரலா
பைலதடீ
நரஹரி ஸோனார ஹரீசா தாஸ பஜன
கரீ ராத்ராந்திவஸ

- பக்த நரஹரி

'இறைவா நான் பொற்கொல்லன். எனது தொழில் உனது திருநாமத்தை உச்சரிப்பதுதான். உடலே ஊதும் உலை. ஆத்மா தங்கம். பிரம்ம ரசத்தைத் தேகத்தில் ஊற்றினேன். பிராணாயாமம் எனும் காற்றை அனுப்பினேன். விவேகம் எனும் சுத்தியலால் காம, க்ரோதங்களைப் பொடியாக்கினேன். புத்தி எனும் கத்தரிக் கோலால் அனாவசியங்களை நீக்கினேன். ஞானம் எனும் தராசைக் கையில் எடுத்துக் கொண்டு ராம எனும் இரு எழுத்துக்களை அவற்றில் இட்டேன். தோளில் தராசு வைக்கும் பையை மாட்டிக்கொண்டு வாழ்க்கைக் கடலின் அக்கரைக்குக் கடந்து சென்றேன்.'



✱ மல்லிகார்ஜுனர் கோயில் நந்தி

வாதம் நடந்தது. இறுதியில் உடன்பாட்டுக்கு இருவரும் வந்தனர். தன் கண்களைக் கட்டிக்கொண்டு விட்டலனின் ஆலயத்துக்குள் நுழையவும், அந்தக் கண் கட்டை அவிழ்க்காமலேயே விட்டலனின் இடுப்பை அளவெடுக்கவும் நரஹரி ஒப்புக்கொண்டார்.

அந்த விந்தையும் அடுத்த நாள் நடந்தது.

நரஹரி தன் இருகரங்களாலும் விட்டல வடிவத்தின் இடுப்பைத் தடவினார். என்ன இது? புலி ஆடையைப் போலல்லவா இருக்கிறது? சிவபெருமானல்லவா புலித் தோலை அணிபவன்? விக்கிரகத்தின் பிற பாகங்களையும் தொட்டுப் பார்த்தார். 'இதென்ன, சூலம் தட்டுப்படுகிறதே. அட, இது உடுக்கை ஆயிற்றே. இன்னொரு கையில் இருப்பது. அக்னியல்லவா? சரி தலைப்பகுதியையும் ஆராய்வோம். அடடா, சடையில் கங்கை நதியின் திரு உருவம் அகப்படுகிறதே.'

குழப்பம் எல்லைமீற, இறுதியில் நரஹரியின் விரல் நெற்றிப்பகுதியைத் தொட்டுப்பார்த்தது. அங்கு புலப்பட்ட நெற்றிக்கண் அவரை மிரளவைத்தது. அவசரமாகத் தம் கண் கட்டுகளை அவிழ்த்தார் நரஹரி.

இடுப்பில் கையை வைத்துக்கொண்டு விட்டலனின் உருவம் புன்னகைத்தது.

நரஹரியின் அகக்கண் திறந்தது. பக்திச் சரடில் கோத்த வார்த்தை முத்துக்களை அபங்க கீதங்களாக்கிப் பொழிய ஆரம்பித்தார்.




படம் : ஸ்ரீஹரி
சித்திரம் : வேதா

மண்ணுக்கான தொழிலை, உயிரினங்களை, பண்பாட்டை, மக்களை மீட்டெடுக்காதவரை எந்தத் தேசத்துக்கும் விடிவில்லை. இந்த அவசியத் தேவையை உணர்ந்துதான் ஒரு படைப்பாளி இயங்குகிறான். அப்படிப்பட்ட தேவையாகத்தான் கிராமத்து இலக்கியங்கள் திகழ்கின்றன. அதில் சமீபத்திய வரவு வே.இராமசாமியின் 'செவக்காட்டுச் சித்திரங்கள்'.

பாட்டன் முப்பாட்டன் காலத்திலிருந்து ஜீவித்து வருகிற வாய்வழி வரலாற்றுக் கதைகள், சிறு தெய்வங்களின் வரலாறு, தம் தந்தை காலத்திய உன்னதமான மனிதர்கள், சமூக மாற்றங்கள்... என்று தொடங்கி தம் காலத்திய இளம்பிராயத்து நினைவலைகள், சடங்கு சம்பிரதாயங்கள், வாழ்நிலை வரை... மிக நேர்மையுடன் பதிவு செய்திருக்கிறார்.

அடுப்பிலே நிலக்கடலை அவியும் மணம், முருக்கிவிட்ட இரும்பு போன்ற கெத்தாப்புக் கிடாய் கொம்பு, செக்கச் செவேல் என்ற செம்மண், கயாமுயா கயாமுயான்னு அவயக்காடு கேக்கு, கறுப்புனாலும் கறுப்பெட்டி கணக்கா கட்டுசெட்டான கறுப்பு - போன்ற வர்ணனைகளும் காட்சிப்படுத்தல்களும், மென்மையான மழைநாளில் வேரோடு பிடுங்கிய முள்ளங்கியோடு வரும் மண்போல் மணம் பரப்புகின்றன. விக்கல் கிழவர், வெங்காயக் குருசாமி, குருட்டுவில், சுரக்காக் கொடி போன்ற பட்டப் பெயர்களும் அவை உருவான கதைகளின் சுவாரஸ்யமும் அலாதியானவை.

ஊரில் மழைபெய்வதற்காக வெள்ளைப் பிள்ளையாரை எல்லை கடத்துகிற கதை தமிழுக்கு மிகவும் புதிது.

வெட்டும்போது ஒரே முண்டுல கெத்தாப்புக் கிடாய் முன்னே போக, பின்னத்தங்காலை பிடித்திருந்த அம்பட்டையன் தலை துண்டாகிவிடுகிறது. உடனே திருவிழாவும் நின்று விடுகிறது.

ஒரு மனிதத் தலை விழும்போது திருவிழாவே நின்று போகிறது. ஆனாலும்

# புதுப்பிக்கப்பட்ட கவலை!




காலம் காலமாய் கொத்துக் கொத்தாய் ஆட்டுக் கிடாய்களின் தலைகள் விழுந்தாலும் திருவிழா கொண்டாட்டமாகத் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

உற்றுப் பார்த்தால் எத்தனையோ ஒடுக்கப்பட்ட மனித இனத்தின் கதையும் இதுதான்.

இந்தத் தொகுப்பு சொல்கிற ஒரே அபாயம்: 'கால வெள்ளத்தில் வே.இராமசாமி போன்றவர்கள் சிதைந்து விடக்கூடாது' என்பது தான்.

- கார்முகில்

புத்தக விமர்சனம்

இன்னமும் ஓரிரு வாரங்களில் புதிய கல்வியாண்டு துவங்கவிருக்கிறது. கூடவே ராகிங் பற்றிய செய்திகளும் அடிபடத் துவங்கிவிடும். புதிதாக கல்லூரியில் சேரும் மாணவ, மாணவிகள் தாங்கள் ராகிங் கொடுமையால் பாதிக்கப்படுவோமோ என்று நடுங்கித்தான் கல்லூரிக்குச் சென்று வருவார்கள். இதைத் தடுப்பதில் கல்லூரிகளின் கடமை என்ன? அரசாங்கத்தின் பொறுப்பு என்ன? ராகிங் தடுப்பு கண்காணிப்பு கமிட்டியின் தலைவரும், சி.பி.ஐ.யின் முன்னாள் இயக்குநருமான ஆர்.கே. ராகவனோடு விவாதிக்கிறார்கள் அண்ணா ஆதர்ஷ் கல்லூரி மாணவிகளான ஸ்வீதா, சங்கீதா...

**"ராகிங் கொடுமைக்கு ஆளானவர்கள் மன அழற்சியால் பாதிக்கப்பட்டு சில சமயங்களில் மரணமடைந்தது உண்டு!"**



# "'ராகிங்'கா..."

**ஸ்வீதா :** நீங்கள் தலைவராக இருக்கும் ராகிங் தடுப்பு கண்காணிப்பு கமிட்டி எப்படி உருவானது?

**ஆர்.கே.ராகவன் :** சில வருடங்களுக்கு முன்னாள் ஹிமாச்சல் பிரதேசத்திலுள்ள மருத்துவக் கல்லூரி மற்றும் ஆந்திராவில் உள்ள பொறியியல் கல்லூரி ஆகியவற்றில் நடந்த ராகிங் கொடுமையில், இரண்டு மாணவர்கள் தற்கொலை செய்து கொண்டார்கள். இந்தக் கொடூரச் சம்பவத்தைத் தொடர்ந்து வழக்கு உச்சநீதிமன்றத்துக்குச் சென்றது. உச்சநீதிமன்றம், ராகிங் கொடுமைகள் நிகழாதவண்ணம் தடுப்பதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பதை ஆராய்ந்து அறிக்கை கொடுப்பதற்காக, என் தலைமையில் ஐந்து பேர் கொண்ட கமிட்டியை அமைத்தது. நாங்கள் நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து பேராசிரியர்கள், மாணவ, மாணவி

கள், காவல் துறை அதிகாரிகள் மற்றும் பொதுநல ஆர்வலர்கள் உட்பட நூற்றுக் கணக்கானோரைச் சந்தித்து எங்கள் அறிக்கையை உச்சநீதிமன்றத்துக்கு அளித்தோம். இப்போது எங்கள் பரிந்துரைகளை உச்சநீதிமன்றம் ஏற்றுக்கொண்டு சில உத்தரவுகளைப் பிறப்பித்துள்ளது. வரும் கல்வியாண்டில் இந்த உத்தரவுகள் கண்டிப்பாக அமுல்படுத்தப்பட்டால் ராகிங் கொடுமைகள் குறையும்.

தாண்டி எங்கோ போய்விட்டது. ராகிங் கொடுமைக்கு ஆளாகுபவர்கள் மன அழுத்தியால் பாதிப்புக்குள்ளாகி சில சமயங்களில் மரணத்தில் முடிந்து விடுகிறது. இதை ஒரு சமூகப் பிரச்னையாகப் பார்க்க வேண்டும்.

**ஸ்வீதா :** ராகிங் செய்பவர்கள் மீது நடவடிக்கை எடுத்தால் உடனே மற்றவர்கள் மறியல், ஆர்ப்பாட்டம் என்று இறங்குகிறார்களே...?

**ராகவன் :** ராகிங் கொடுமையில் ஈடுபடுபவர்களைத் தண்டிக்க சட்டங்கள் இருக்கின்றன. ஆனால், பிரச்னை என்னவென்றால் கடுமையான தண்டனை வழங்கும்படி சட்டங்கள் இல்லை என்பதுதான். இது விஷயத்தில் காவலர்களுக்கும் கொஞ்சம் விழிப்புணர்வு தேவையாக இருக்கிறது. ஸீனியர்கள், குற்றவாளிக்கு ஆதரவாகக் குரல் கொடுத்தால் கல்லூரி நிர்வாகம் பயப்படக் கூடாது. உடனே குற்றம் செய்தவரை டிஸ்மிஸ் செய்ய வேண்டும். அரசியல்வாதிகள் நடத்தும் பொறியியல், மருத்துவக் கல்லூரிகளில் நடக்கும் ராகிங் கொடுமைகள் அப்படியே மறைக்கப்படுகின்றன. இது போன்ற சூழலில் மாணவ, மாணவிகள் ஒன்றுசேர்ந்து



# டிஸ்மிஸ் செய்!”

**- சி.பி.ஐ.முன்னாள் இயக்குநர் ஆர்.கே.ராகவன்**

**சங்கீதா :** ஜூனியர்கள், ஸீனியர்களைப் புரிந்துகொள்ள மென்மையான சீண்டல்கள் உதவும் என்கிறார்களே?

**ராகவன் :** அதெல்லாம் பழங்கதை. இப்போது விவகாரம் கட்டுப்பாடுகளைத் தயங்காமல், நடந்த கொடுமைகளை மீடியா மூலம் உலகத்துக்குத் தெரிவிக்க வேண்டும். இதில் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை.

**சங்கீதா :** ஹாஸ்டலில் சேரும் புதியவர்

களின் நிலைதான் ரொம்ப பரிதாபம்!

**ராகவன் :** ஹாஸ்டலில் சேரும் மாண வர்களிடம் ராகிங்கில் ஈடுபட மாட்டேன் என்று உறுதிமொழி வாங்க வேண்டும். 'ராகிங்கில் ஈடுபட்டால் என்னை டிஸ்மிஸ் செய்ய கல்லூரிக்கு அதிகாரம் உண்டு' என்று உறுதிமொழியில் சொல்லப்பட் டிருக்க வேண்டும். அந்த உறுதிமொழியில் அவர்களின் பெற்றோர்களும் கையெழுத் திட்டிருக்க வேண்டும். மேலும் ஹாஸ்ட லில் முழுநேர வார்டன் எப் போதும் பொறுப்பில் இருக்க வேண்டும். மாணவர்களோ, அல்லது

**"திரைப் படங்களில் வரும் கல்லூரிக் காட்சிகள் 'ராகிங்'கை ஊக்குவிப்பது போல அமைகிறதே?"**



பாதுகாவலர்களோ குடித்துவிட்டு சுற்றாமல் பார்த்துக் கொள்வது வார்டன்களின் கடமை. வார்டன்கள் அவ் வப்போது மாணவர்களின் அறைக்குள் அதிரடியாகச் சென்று கண்காணிக்க வேண் டும்.

**ஸ்வீதா :** மற்ற இடங்களிலும் ஈவ் டீசிங் இருக்கிறதே?

**ராகவன் :** இதற்கு ஒரே தீர்வு அநியாயத் தைத் தட்டிக்கேட்கும் தைரியம் உங்களுக்கு வரவேண்டும். இப்போதெல்லாம் பெண் கள் கல்லூரிக்கு வெளியில் காவலர்கள் ட்யூட்டியில் இருக்கிறார்கள். உங்களுக்கு ஒரு கொடுமையோ, அவமானமோ நேர்ந்து விட்டால் முடங்கிப் போய்விடாதீர்கள். தவறு செய்தவர்களைத் தட்டிக்கேட்டு, தண்டனை வாங்கிக் கொடுங்கள். அப் போதுதான் அவர்கள் மீண்டும் தவறு செய்ய மாட்டார்கள். சிலர் பயந்து போய் யாரிடமும் சொல்லாமல் மறைத்து விடு கிறார்கள். பெற்றோர்களும் கல்லூரியில் படிக்கும் தனது மகன் மகளின் நடவடிக்கை களைக் கவனித்து வர வேண்டும்.

**சங்கீதா :** திரைப்படங்களில் வரும் கல் லூரிக் காட்சிகள் ராகிங்கை ஊக்குவிப்பது போல அமைகின்றனவே?

**ராகவன் :** நீங்கள் சொல்வதிலும் ஓரளவு உண்மை இருக்கிறது. திரைப்படங் களாகட்டும், தொலைக்காட்சி சேனல்களா கட்டும் அல்லது அச்சு ஊடகமாகட்டும்,

அவற்றில் ராகிங்குக்கு எதிரான இயக்கம் நடத்தினால், அந்தச் செய்தி யாரைப் போய் அடைய வேண்டுமோ அங்கே சென்றடையும். மீடியா ராகிங் கொடுமைகளை வர்த்தகமாக்காமல், ஆக்கபூர்வமாக நடந்து கொள்ள வேண்டும்.

**ஸ்வீதா :** ராகிங் தொடர்பாக உச்சநீதிமன்ற சிபாரிசுகள் என்ன?

**ராகவன் :** ஒவ்வொரு கல்லூரியிலும் உளவியல் மருத்துவரை நியமிக்க வேண்டும். ராகிங் செய்யும் ஸீனியர் மாணவர்களுக்கு இவர்கள் கவுன்ஸிலிங் அளிக்க வேண்டும். இந்த மருத்துவர்கள் ராகிங்கில் பாதிக்கப்பட்டவர்களையும் ஆறுதல் சொல்லிக் குணப்படுத்துவார்கள். அதேபோல் மாணவர்களிடம் குடிப்பழக்கத்தை ஒழிப்பதற்கான நடவடிக்கைகளையும் எடுக்கவேண்டும் என்று உச்சநீதிமன்றம் சொல்லியிருக்கிறது. ராகிங் செய்பவர்கள் மீது கடுமையான நடவடிக்கை, ராகிங்கைத் தடுக்கத் தவறிய கல்லூரித் தலைவர்கள் ஆகியவர்கள் மீதும் நடவடிக்கை என்று பல உத்தரவுகளை உச்சநீதிமன்றம் போட்டிருக்கிறது. மாநில அரசு இவற்றைக் கண்டிப்பாக அமுல்படுத்தினால் ராகிங் கொடுமைகள் குறைவதற்கு வாய்ப்புண்டு. என் தலைமையில் உள்ள கமிட்டி தொடர்ந்து கண்காணிப்பில் ஈடுபடும். ப்ளஸ் ஒன் படிக்கும்போதே ராகிங் கொடுமைகளைப் பற்றி ஒரு பாடம் வைத்தால், கல்லூரிக்குப் போகும்போது அதுபோன்ற செயல்களில் ஈடுபட மாணவர்கள் தயங்குவார்கள்.



**"ராகிங்கில் ஈடுபட மாட்டேன் என, மாணவர்களிடம் கல்வி நிறுவனம் உறுதிமொழி வாங்க வேண்டும்!"**

**சங்கீதா:** ராகிங்கை ஒழிக்க வேறு என்ன செய்ய வேண்டும்?

**ராகவன் :** ராகிங்கை தடுக்கத் தவறிய கல்லூரியின் அங்கீகாரத்தை ரத்து செய்ய வேண்டும். சம்பள மான்யத்தை நிறுத்த வேண்டும்! இது நடந்தாலே ராகிங் முற்றிலும் ஒழிந்துவிடும்!

**- கௌசி**

**ஒருங்கிணைப்பு : நளினி சம்பத்குமார்**

**படங்கள் : ஸ்ரீஹரி**

''இருந்தாலும் நம்ம தலைவருக்குப் பண ஆசை இப்படி இருக்கக் கூடாது!''

''என்ன சொல்றே?''

''பொதுக்கூட்டத்துல குட்டி தலைவர்கள் பேச்சுக்கு இடையே சின்ன கமர்ஷியல் ப்ரேக்குனு வர்த்தக விளம்பரம் பண்ணி பணம் சம்பாதிக்கறாரே!''

- எஸ்.முகம்மது யூசுப்



# ஸாரி... ராங் நம்பர்!



''ஹலோ சுமதி இருக்காங்களா...?''

''இருக்க! மாமியார்கிட்ட பேசிக்கிட்டிருக்காங்க!''

''மன்னிக்கணும்... ராங் நம்பர்...''

- க.சேகர்

''அந்த அரசியல்வாதிக்கு ரொம்பத் தான் கொழுப்பு!''

''எதை வைச்சு சொல்றே?''

''படத் தயாரிப்பாளர்கிட்ட உங்க ஹீரோவோட கால்ஷீட்டை கட்சி தேர்தல் பிரசாரத்துக்குக் கொடுங்கன்னு கேக்கறாரே!''

- ஆர்.விஸ்வநாதன்





"ஒரு பயில்வான் இன்னொரு பயில்வானுக்கு கடிதம் எழுதினா எப்படி எழுதுவார்?"

" 'பலம் பலம் அறிய ஆவல்'னு!"

- 'குலசை' நஜ்முதீன்

"உனக்கு இங்க 'வாக்கு' உரிமை இருக்குதா?"

"போலிங் பூத்ல இருக்குது. வீட்ல பொண்டாட்டிகிட்டதான் இல்ல!!"

- வெ.சீதாராமன்





"சிரிப்பே நோய்க்கு மருந்து என்பதை அந்த டாக்டர் உணர்ந்துட்டார்!"

"எப்படி?"

"அவரோட பேஷண்ட்களுக்காக, ஒரு 'காமெடி சேனல்' ஆரம்பிச்சிட்டார்!"

- அ.சுவைறல் றஹுமான்



நமது நாட்டின் மிகப் பெரும்பான்மையான மக்களுக்கு, 'பார்வையாளர்கள்' எனும் பாத்திரம் வழங்கப்பட்டிருக்கிறது. ஒரு கௌரவத்துக்காகத்தான் 'பார்வையாளர்கள்' என்று குறிப்பிடுகிறோமே தவிர, அச்சொல்லுக்கு 'வேடிக்கை பார்ப் பவர்கள்' என்கிற இன்னொரு பொருளும் உண்டு. சிலர் வித்தை காட்டுவது, பலர் அதை வேடிக்கை பார்ப்பது என்கிற இரண்டு நிலைகள்தான் நமது சமூகத்தின் நெடுநாள் வரலாறு.

ஒரு பாம்பாட்டி ஐந்தே நிமிடங்களில் நூறு பேரைத் திரட்டி நிற்கவைத்துவிடுகிறான். கிடைத்ததை எடுத்துக்கொண்டு அவன் புறப்பட்டுப் போகும்வரை, அந்த நூறு பேரும் அவனது பாம்பு வித்தைகளை விழி பிதுங்க வேடிக்கை பார்த்துக்கொண்டிருக் கிறார்கள்.

போக்குவரத்து தடைசெய்யப்பட்டு வெறிச்சோடி நெடுந் தூரம் நீண்டு கிடக்கிறது பாதை. அதன் இரண்டு பக்க நடை பாதைகளிலும் நெருக்கியடித்து நின்றுகொண்டு வெறிச்சோடிக் கிடக்கும் பாதையை வெறித்துப் பார்த்துக்கொண் டிருக்கிறார்கள் பல்லாயிரக்கணக்கான மக்கள். அரைமணி நேரம் கழித்து படைபரிவாரங்களுடன் முதல்வரின் வாகன அணிவகுப்பு!

ஒரு விபத்து நேர்ந்தவுடன் எங்கிருந்தோ நூறு பேர் ஓடிவந்து உடனே அவ்விடத்தைச் சூழ்ந்து வேடிக்கை பார்க்கிறார்கள். அவர்களின் பணி வேடிக்கை பார்ப்பது மட்டுமே. விபத்தில் அடிபட்டவர்களைக் காப்பாற்ற வேறு சில மனிதாபிமானிகள் எங்கிருந்தோ முன்வந்து முதலுதவிப் பணிகளை மேற்கொள் கிறார்கள். விபத்தை வேடிக்கை பார்த்தால் போலீஸ் கேஸ் ஆகாது. விபத்துக்குள்ளானவர்களைக் காப்பாற்றப் போனால் போலீஸ் கேஸ் ஆகும். நமக்கெதற்கு வம்பு? இப்படித்தான் பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறார்கள்.

திரைப்படப் படப்பிடிப்பு நடக்கும் பகுதிகளில் சுற்றுவட்டார கிராம மக்கள் ஆயிரக்கணக்கில் திரண்டு, நாட்கணக்

ஜெயபாஸ்கரன்



# வாடிக்கையாய்ப் போன 'வேடிக்கை'!

கில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பதை நாம் பல இடங்களில் பார்க்கிறோம். படப்பிடிப்புப் பணிகளில் மிகவும் கடுமையான பணி, வேடிக்கை பார்க்கத் திரண்டு விடுகிற பெருங்கூட்டத்தைக் கட்டுப்படுத்துகிற பணிதான் என்று திரையுலகப் பணியாளர் ஒருவர் அலுத்துக் கொண்டார்!

**அறியாமை என்பது, ஒருவனை எல்லாவற்றையும் வேடிக்கை பார்க்கிறவனாக மாற்றிவிடுகிறது**

ஒரு வேடிக்கை முடிவடைந்து கூட்டம் கலைந்தவுடன், அந்தக் கூட்டத்தின் உறுப்பினர்களுக்கு இன்னொரு இடத்தில் வேடிக்கை அரங்கேறத் தயாராக இருக்கிறது.

தியாகராய நகரின் போக்குவரத்து நெரிசல் மிகுந்த முதன்மையான வீதியொன்றில் தவணை முறையில் வீட்டுப் பயன்பாட்டுப் பொருட்களை விற்கிற கடை முன் திரண்டு நின்ற பெருங்கூட்டம், அக்கடையின் கண்ணாடி வழியே வைத்த கண் வாங்காமல் உள்ளே பார்த்துக் கொண்டிருக்கிறது. விஷயம் வேறொன்றும் இல்லை. எங்கோ ஒரு நாட்டில் ஏதோ இரண்டு நாடுகளுக்கிடையில் நடந்து கொண்டிருந்த கிரிக்கெட் போட்டி ஏதோவொரு அலைவரிசையில் அங்கிருந்த தொலைக்காட்சிப் பெட்டியில் ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கிறது. போக்குவரத்துப் பிரச்னை எழும் என்கிற நிலையில் கடைப் பணியாளர் தொலைக்

**எழுத்து எக்ஸ்பிரஸ்**

காட்சியை நிறுத்திய பிறகுதான், இருண்ட முகங்களோடு அவர்கள் அங்கிருந்து கலைகிறார்கள்!

இந்தியாவின் பெருஞ்செல்வமாகக் கருதப்படுகிற, பிற நாடுகளில் காணக் கிடைக்காத பெரும்பான்மை மனித வளம் இங்கு ஏதாவதொரு காட்சியை எங்கோவொரு இடத்தில் எப்போதும் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறது.

**த**மிழகம் முழுவதும் நடைபெறுகிற 'ஜல்லிக்கட்டி'ல் பங்கேற்கும் மாடுகளும் அதைப் பிடிக்கும் வீரர்களும் எண்ணிக்கையில் குறைவுதான். ஆனால் எந்தவிதமான அழைப்புமின்றி வாய்வழியாக அச்செய்தி பரவி, அங்கு வந்து சேர்ந்துவிடுகிற பெருங்கூட்டத்தின் எண்ணிக்கை லட்சக்கணக்கைத் தொடுகிறது. மாடுபிடி விளையாட்டுக்களில் வீரர்களைக் காட்டிலும் அதிக எண்ணிக்கையில் மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறவர்கள், அதை வேடிக்கை பார்க்கப் போனவர்களாகவே இருக்கிறார்கள்!

**வே**டிக்கை பார்க்கிற மனோபாவம் நமது மக்கள் திரளின் அனைத்து அடுக்குகளிலுமே வேரூன்றியிருக்கிறது. வேடிக்கை பார்க்கிற இடமும், நேர அளவும், காட்சிகளும்தான் வேறுவேறாக இருக்கின்றனவேயொழிய, 'வேடிக்கை பார்ப்பது' என்கிற பொதுக் கோட்பாடு மட்டும் ஒன்றுதான். இல்லையென்றால் திரை நடிகர்களும், நமது சமூகத்தின் பல்வேறு வகையான பிரபலங்களும் பல்லாயிரக்கணக்கில் திரண்டு, வருமானத்துக்குரிய தங்களது பணிகளைத் தள்ளிவைத்துவிட்டு, மைதானங்களுக்குச் சென்று கிரிக்கெட் விளையாட்டை வேடிக்கை பார்க்கமாட்டார்கள்.

நமது கவலையெல்லாம், வேடிக்கை பார்ப்பதொன்றையே எப்போதுமான தங்களது வேலையாகக் கொண்டிருக்கிறார்களே, அவர்களைப் பற்றித்தான். ஒரு மைதானத்தின் கேலரியில் அமர்ந்து ஒரு நடிகர் கிரிக்கெட் விளையாட்டை வேடிக்கை பார்ப்பதையும் சேர்த்து, தவணைமுறைக் கடைகளில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்களே அவர்களைப் பற்றித்தான்.

அறியாமை என்பது, ஒருவனை எல்லாவற்றையும் வேடிக்கை பார்க்



கிறவனாக மாற்றிவிடுகிறது. நமது வெகுமக்கள், வேடிக்கை என்ற பெயரில் மற்றவர்கள் வேலை செய்வதைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சாலைகள் சமன் செய்கிற புல்டோசர்களைக்கூட மணிக்கணக்கில் நின்று வேடிக்கை பார்க்கிறவர்கள் இருக்கிறார்கள்தானே? தங்களது வேலைகளையெல்லாம் பின்னுக்குத் தள்ளிவிட்டு லட்சக்கணக்கில் திரண்டு, அழகுத் தமிழிலும், ஆவேசத் தமிழிலும்

தலைவர்கள் பேசுவதை, நூற்றுக்கணக் கான கூட்டங்களில் மணிக்கணக்கில் நின்று கேட்பவர்களுக்கு என்ன கிடைக் கிறது? எதை வழங்கின அந்த உரைகள்? வாழ்வில் என்ன வளத்தைக் கண்டார்கள்? கூட்டங்கள் என்பது பரஸ்பர 'வசைமாரி பொழிதல்' என்பதன்றி வேறென்ன?

**வே**டிக்கை பார்க்கும் நம்மை அப் படியே வைத்திருப்பதும், நாளுக்கு நாள் நமது எண் ணிக்கையைப் பெருகச் செய்வதும்தான் வித்தை காட்டுபவர்களுக்கான 'வருமானம்' என்பதை நமது வெகுமக்கள் எப்போது புரிந்துகொள்ளப் போகிறார்கள்? மணிக்கணக்கில் வேடிக்கை பார்க்கிறவர்கள் வீதிகளில் மட்டுமல்ல; நமது வீடுகளிலும் உரு வாக்கப்படுகிறார்கள். பெண்களைக் கதறி யழச் செய்து கண்ணீர் சிந்த வைப்பதையே கொள்கையாகக் கொண்ட நமது தொலைக் காட்சித் தொடர்கள், தங்கள் வீடுகளில் அமர்ந்த நிலையில் அழுதபடி வேடிக்கை பார்க்கும் லட்சக்கணக்கான பெண்களை உருவாக்கியிருக்கின்றனவே!



வேடிக்கை பார்க்கிற மனோபாவம் நமது மக்கள் திரளின் அனைத்து அடுக்குகளிலுமே வேரூன்றியிருக்கிறது

**ஒ**ரே திரைப்படத்தை இருநூறு முறை பார்த்ததாகச் சொல்கிறவருக்கு அப்படத்திலிருந்து என்ன கிடைக்கிறது? அதே நேரத்தில் 'அந்தப் படத்துக்கு' ஒரு இளிச்சவாயன் கிடைத்திருக்கிறான் என்று பொருள் கொள்ளலாம்தானே? கண்டு கற்கும் நோக்கற்ற 'வெற்று வேடிக்கை பார்வையாளர்கள்' எனும் பாத்திரம், நமது வெகு மக்களை எள் முனையளவும் முன்னேற்றமடையச் செய்யாது. வித்தை காட்டுபவர்கள், தங்களது வித்தைகளை வேடிக்கை பார்ப்பவர்களை வணங்குவார் கள். ஆனால் வேடிக்கை பார்க்கிறவர்கள், அவரவரது வேலைகளைப் பார்க்கிறவர் களாகவும் வளர வேண்டுமே என்று வித் தைக்காரர்கள் கவலைப்படுவதில்லை.

**'நா**ங்கள் சொல்வதையெல்லாம், கண்களை மூடிக்கொண்டு கேளுங்கள் கேளுங்கள் கேட்டுக்கொண்டேயிருங்கள். நாங்கள் செய்வதையெல்லாம், வாயை மூடிக் கொண்டு பாருங்கள் பாருங்கள் பார்த்துக் கொண்டேயிருங்கள். இவை யிரண்டையும் தாண்டி எதையாவது பேச வேண்டுமென்று நினைத்தீர்கள் என்றால், பல்வேறு தொலைபேசி நிறுவனங்களின் பல்வேறு திட்டங்களின் கீழ் பேசுங்கள் பேசுங்கள் பேசிக்கொண்டேயிருங்கள். ஆனால் எந்தக் காலத்திலும் எதையாவது 'செய்ய' வேண்டும் என்று மட்டும் நினைக்காதீர்கள்!' என்பதே நமது நிர் வாகச் சமூகங்கள் நமது வெகுமக்களுக்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் முன் வைக்கிற செய்திகள். இதற்குக் காரணம், நமது வெகுமக்கள் வெற்று வேடிக்கை பார்ப்பதையன்றி வேறு எதையும் அறி யாதவர்கள் என்கிற சிலரது நம்பிக்கை தான்! 'வித்தை' காட்டுகிறவர்கள் இருக்கத் தான் செய்வார்கள்; வேடிக்கை பார்க்கிற வர்கள் இருக்கிறவரைக்கும். ●

"அம்மா; நான், மனைவி; வாடகை வீடு; முன் அறையில் சிறிய நூலகம்; வாராவாரம் வாசிக்க கல்கி - இதுதான் எங்களோட உலகம்!'' எனக் கூறுகிறார் திருவானைக்காவல், ஸ்ரீமத் ஆண்டவன் கலை அறிவியல் கல்லூரியின் தமிழ்த் துறை தலைவர் கரிகாலன்.

''சின்ன வயசுல கல்கியை நான்தான் அவனுக்கு அறிமுகம் செஞ்சு, வாசிக்க வெச்சேன். காலேஜ் முடிச்சு பி.ஹெச்.டி. பண்ணப் போனான். அப்ப அவன் புத்தகப் பையில தடிமன் தடிமனா ஆய்வுப் புத்தகங்கள் பல இருக்கும். அதுக நடுவுல கல்கி இருக்கும். நல்ல புத்தகத்தைப் பையன் படிக்கப் பழக்கப் படுத்தியிருக்கோம்னு எனக்கு அப்ப ரொம்ப சந்தோஷமா இருக்கும்!'' எனப் பூரிக்கிறார் தாய் ஜானகி.

''பதினைஞ்சு வயசுலேர்ந்து கல்கி படிச்சுட்டு வர்றேன். இப்ப எனக்கு வயசு நாற்பது. இந்த இருபத்தைந்து வருஷத்துல கல்கி வெளி வர்றதுல இடையில ஒரு தொய்வுன்னு நெனைக்கிறேன். அப்புறமா புது உத்வேகத்தோட வெளிவரத் தொடங்கிச்சு. வருஷம் ஆக ஆக இன்னும் இளமையாகிட்டே இருக்கு. பிரிச்சதும் நான் உடனே படிப்பது அருள்வாக்கு. மகா பெரியவர் ஒரு பக்கத்துல சொல்லியிருக்கற விஷயம், ஓராயிரம் பக்கங்கள்ல விரிவுரை எழுத வேண்டிய அளவுக்கு பிரமிக்க வைக்கும். அந்த ஒரு பக்கம், ஓராயிரம் பக்கங்களுக்குச் சமம்!'' என்கிறார் கரிகாலன்.

''எங்களுக்குக் கல்யாணம் ஆகி அஞ்சு வருஷம் ஆகுது. அதுக்கு முன்னாடி நான் எந்த வார இதழும் படிச்சதில்ல. படிக்கிற ஆர்வத்தைத் தூண்டி விட்டவர் என் கணவர். வாரா வாரம் வீடு தேடி வரும் கல்கி படிக்க ஆரம்பிச்சேன். இதுல எல்லா விஷயமும் இருக்கு. இந்த வாரம் 17.5.2009 இதழ்ல 'கல்கி மாமி' கட்டுரை நல்லா வந்திருக்கு. அதுல ரெண்டு தகவல் என்னைக் கவர்ந்திருக்கு. ஒண்ணு, 'நீ சோப்புக்குக் கூட சோப்பு போட்டு அலம்பி வைப்பாய், அம்மா!' இன்னொன்று, மதிய உணவின் போது சுட்ட அப்பளத்தின் மீது உருக்கிய நெய் தடவி கல்கி மாமி, கல்கி அவர்களுக்கு உண்ணத் தருவது. முதல் தடவையா இப்பத்தான் இதை நான் கேள்விப்பட்டிருக்கேன். நானும் என் கணவருக்கு சுட்ட அப்பளத்தின் மீது உருக்கிய நெய் தடவித் தருவதற்கு எண்ணியுள்ளேன்!'' எனப் புன்னகைக்கிறார் சுகன்யா கரிகாலன்.

# சுட்ட அப்பளம்... உருக்கிய நெய்...



செய்திச் சித்திரம்: **ஸ்ரீஅரசு**




# சேவை

மனிதனாகப் பிறந்தவனுக்கு எவ்வளவோ பாக்கியங்கள் உண்டு. எல்லா பாக்கியங்களுள்ளும் மேலான பாக்கியம் பிறருக்குச் சேவை செய்வதே.

'சேவை' என்று தெரியாமலே அவரவரும் தமது குடும்பத்துக்காகச் சேவை செய்கிறோம். அதோடு நமக்குச் சம்பந்தமில்லாத குடும்பத்துக்கு, ஊருக்கு, நாட்டுக்கு, சர்வ தேசத்துக்கும் நம்மால் முடிந்த சேவையைச் செய்ய வேண்டும் என்கிறேன். நமக்கு எத்தனையோ கஷ்டங்கள். உத்தியோகத்தில் தொந்தரவு, சாப்பாட்டுக்கு அவஸ்தை, வீட்டுக் கவலை - இத்யாதி இருக்கின்றன. நம் சொந்தக் கஷ்டத்துக்கு நடுவில் சமூக சேவை வேறா என்று எண்ணக் கூடாது. உலகத்துக்குச் சேவை செய்வதாலேயே சொந்தக் கஷ்டத்தை மறக்க வழி உண்டாகும். அதோடுகூட 'அசலார் குழந்தைக்குப் பாலுட்டினால், தன் குழந்தை தானே வளரும்' என்றபடி நம்முடைய பரோபகாரத்தின் பலனாக பகவான் நிச்சயமாக நம்மைச் சொந்தக் கஷ்டத்திலிருந்து கைதூக்கி விடுவான். ஆனால், இப்படி ஒரு லாப நஷ்ட வியாபாரமாக நினைக்காமலே பிறர் கஷ்டத்தைத் தீர்க்க நம்மாலானதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்து விட்டால் போதும், அதனால் பிறத்தியான் பெறுகிற பலன் ஒரு பக்கம் இருக்கட்டும், நமக்கே ஒரு சித்த சுத்தியும், ஆத்ம திருப்தியும், சந்தோஷமும் ஏற்பட்டு அந்த வழியில் மேலும் மேலும் செல்வோம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

தமிழில் முதன்முறையாக முழுப்படத்தையும் ஒரே வீச்சில் முடித்து விட்டு, திரைப்பட விழாவைக் கொண்டாடியிருக்கின்றனர் 'வேடப்பன்' படக்குழுவினர்.

நடிகை 'தீபிகா'வின் தீவிர ரசிகனாக வாழ்ந்து வரும், டீக்கடையில் மாஸ்டராக வேலை பார்க்கும் வேடப்பன் என்கிற பாத்திரம் நடிகையைப் பார்த்துப் பேச வேண்டுமென்று முயற்சி செய்கிறான். இதன் விளைவாக ஏற்படும் தொடர் சம்பவங்களால் நடிகையோடு சேர்ந்து நடிக்கும் வாய்ப்பு கிடைக்கும்போது அவளைக்

★ 'வேடப்பன்' படத்தில்...



கொன்றுவிடுகிறான். தீபிகாவின் கொலைப் பின்னணி என்ன என்பதை மிக சுவாரஸ்யமாகச் சொல்லியிருக்கிறாராம் படத்தின் இயக்குநர் ஆனைவாரி ஏ.ஸ்ரீதர்.

பிரபல ஒளிப்பதிவாளர் கண்ணனின் உதவியாளர் டி.மகிபாலன் ஒளிப்பதிவு செய்கிறார். ரெட்ஹில்ஸில் அரிசி வியாபாரம் செய்யும் பி.ராதாகிருஷ்ணன் பி.ஆர்.கே. மூவீஸ் சார்பில் படத்தைத் தயாரித்து இருக்கிறார். குறைந்த முதலீட்டுத் திரைப்படங்களுக்கான சலுகைகள் இப்படத்துக்கும் கிடைக்கும் என எதிர்பார்க்கலாம்!

★ இந்தியாவில் முதன் முதலில் [1795] பிரிட்டிஷாரை எதிர்த்து சுதந்திரத்துக்காக குரல் கொடுத்த பேரரசன் ஒருவனைப் பற்றிய கதைதான் 'பழசி ராஜா.'

★ மலையாளத்தில் மிகவும் புகழ்பெற்ற 'ஒரு வடக்கன் வீரகதா' இயக்குநரான ஹரிஹரனின் திரைப்படம் இது. மம்முட்டி, பழசி ராஜாவாகவும், அவருடைய தளபதியாக சரத்குமாரும் நடிக்கின்றனர்.

★ இருநூறு வருடம் பின்னோக்கிய [1795-1805] கதை என்பதாலும், பெரும்பாலும் போரை அடிப்படையாகக் கொண்டிருப்பதாலும் இதற்கான

## 'ராஜா' மம்முட்

மூன்று ஆண்டு இடைவெளிக்குப் பிறகு இயக்குநர் வசந்தபாலனின் மூன்றாவது படம் 'அங்காடித்தெரு'. திரையரங்க ஊழியர் சுப்பிரமணியின் மகன்தான் படத்தின் நாயகன் மகேஷ். படத்தின் அத்தனை பாடல்களையும் நா.முத்துக்குமார் எழுத, இரண்டு இசையமைப்பாளர்கள் இசை வடிவம் கொடுத்து இருக்கின்றனர்.

'அவள் அப்படி ஒன்றும் அழகில்லை...', 'உன் பேரைச் சொல்லும்போதே....' பாடல்கள் இனி காதலர்களின் இதயங்களை மீட்டலாம். மூன்று வருடங்களுக்கு முன்பு தன் திருமணத்துக்கு முத்துக்குமார் எழுதிய பாடல்தான் பாராவின் தலைப்பில் உள்ளது.

* 'பழசி ராஜா' படத்தில்...



சிறப்பு சப்தம் குறித்த கவலையில் இருந்தாராம் இயக்குநர். சமீபத்தில் ஆஸ்கர் விருதுபெற்ற ரசூல் பூக்குட்டி [ஒலிப்பதிவு]யை இயக்குநரிடம் அறிமுகம் செய்திருக்கிறார் தயாரிப்பாளர்.

படத்தை முழுவதுமாகப் பார்த்த ரசூலுக்குப் பிடித்துப் போகவே, முழுப்படத்துக்குமான சிறப்பு ஒலிப்பதிவை முடித்துக் கொடுத்திருக்கிறார். ''இன்ஸ்டிட்யூட்டில் படிக்கும்போதே 'ஒரு வடக்கன் வீரகதா'வைப் பார்த்திருக்கிறேன், அவருடைய படத்தில் வாய்ப்பு கிடைத்ததைப் பெருமையாகக் கருதுகிறேன்'' என்கிறார் இந்த ஆஸ்கர் நாயகன். இவரோடு இணைந்து முழுப்படத்துக்கும் இசையமைத்திருக்கிறார் இளையராஜா.

# ...டி... 'தளபதி' சரத்குமார்!

''என்னுடைய பிள்ளைகள் செய்து கொண்டிருக்கும் படங்கள் தமிழ் சினிமாவில் நல்ல மாற்றத்தைத் தொடங்கியிருக்கின்றன. அவர்கள் ஸ்டார் இமேஜை உடைத்துக்கொண்டிருக்கிற புதியவர்கள்...'' என்றார் பாலுமகேந்திரா.

''இதுவரை எட்டு படங்கள் வெளியிட்டு இருக்கிறோம். ஆனால் தமிழில் இப்போதுதான் முதல் படம் எடுத்திருக்கிறோம்... இதை வியாபார நோக்கத்துக்காக எடுக்கவில்லை, இந்தப் படம் எங்களுக்கு ஒரு கிரீடம்..'' என்கிறார் தயாரிப்பாளர் அருண்பாண்டியன்.

**த**மிழ் சினிமாவில் முதன்முறையாக வறுமை பற்றிய பாடல் ஒன்றைப் படம் பிடித்திருக்கிறாராம் இயக்குநர். கடைகளில் வாங்குபவர்களின் நிலையை விட அதை விற்பவர்களின் நிலை ரொம்ப மோசம் என்பதுதான் படத்தின் மையம். அங்காடித் தெருவில் இனி இசை வீதி உலா!

- ராஜசேகர்

* 'அங்காடித் தெரு' படத்தில்...



விருதுநகரையே விறகாக்கி சுட்டெரித்துக் கொண்டிருந்தது சித்திரை வெயில். கல்யாணப் பத்திரிகைகளின் மேலுறைகளின் மேல், பெயர் அட்ரஸை எழுதிக் கொண்டிருந்த சிவமணி நாடாரை வெகுவாகவே வியர்க்க வைத்தது. தொண்டைப் பகுதி ஈரம் காய்ந்து உப்புத்தாளாய் உலர்ந்து போயிருந்தது.

சமையலறையில் இருந்த மனைவியைப் பார்த்துக் குரல்கொடுத்தார்.

''சொர்ணம். இன்னிக்கு வெயில் உக்ரமாயிருக்கு. ரெண்டு துளி எலுமிச்சம் சாறு பிழிஞ்சு கொஞ்சம் மோர் கொடேன்.''

''நீங்க கேட்ட மோரும் இல்ல. அதுல பிழிய எலுமிச்சம்பழமும் இல்லை. பானையில தண்ணியிருக்கு... எடுத்துக் குடிங்க. ஏதோ இந்த வீட்ல பாலும் தயிரும் ஆறாய்ப் பெருகி ஓடறதாய் நினைப்பு!''



ராஜேஷ்குமார்

இது கடந்த முப்பதாண்டு திருமண வாழ்க்கையில் வாடிக்கையான ஒன்று.

வேட்டி நுனியால் வியர்வையை ஒற்றியபடி பானைத் தண்ணீருக்காக எழுந்த விநாடி, மகள் வள்ளியம்மை நீர் நிரம்பிய பெரிய பித்தளை தம்ளரோடு வந்தாள்.

''இந்தாங்கப்பா...''

''உனக்கேம்மா சிரமம்?''

''இதுல என்னப்பா சிரமம்? காலையிலிருந்து உட்கார்ந்த இடத்தை விட்டு அசையாம கல்யாணப் பத்திரிகை கவர் மேல உங்க நண்பர்களோட பேரையும் அட்ரஸையும் கை நோக எழுதிட்டு இருக்கீங்க. பெயர் அட்ரஸை நீங்க சொல்ல நான் வேணும்ன்னாலும் எழுதறேன்னு சொன்னாலும் பிடிவாதமா நான்தான் எழுதுவேன்னு அடம்பிடிக்கறீங்க. நான் பொழுது போகாமே சிலோன் ரேடியோவில் பாட்டு கேட்டுக்கிட்டு இருக்கேன். நான் கல்யாணப் பொண்ணுங்கிற காரணத்தால வேலை ஏதும் செய்யக்கூடாதுன்னு சட்டம் ஏதாவது இருக்கா என்ன?''

சிவமணி நாடார் தண்ணீரை வாங்கிக் குடித்து விட்டுச் சிரித்தார். ''அப்படி ஏதும் இல்லேம்மா... என்னோட பால்ய காலத்து சிநேகிதர்களுக்கெல்லாம் என் கையால அவங்க பேரையும் அட்ரஸையும் எழுதி என் கைப்பட போஸ்ட் பண்ணினாத்தான் எனக்கு ஒரு சந்தோஷம். அவங்களுக்கும் என்னோட கையெழுத்தைப் பார்த்ததும் ஒரு சந்தோஷம் கிடைக்கும்.''



ப்ளாக் அன்ட் வொயிட்

கதைகள்-6

''அது சரிப்பா... உங்க பால்ய காலத்து சிநேகிதர்களோட பேரையெல்லாம் எப்படி இன்னமும் ஞாபகம் வெச்சுக்கிட்டு

இருக்கீங்க. அது உங்களால எப்படி முடியுது...?''

''இப்படித்தான்'' என்று சொன்னவர், ''இதைக் கொஞ்சம் பாரம்மா'' என்றார்.

காந்திக் குல்லாய்களைத் தலையில் அணிந்தபடி நேர்ப் பார்வை பார்த்தபடி ஐம்பதுக்கும் மேற்பட்ட இளைஞர்கள் நெருக்கியடித்து நின்றிருக்க, நடுவே நாற்காலியில் ஒருவர் கம்பீரமாய் அமர்ந்து இருந்தார்.

''நடுவுல உட்கார்ந்து இருக்கிறவர் யாரப்பா?''

''காங்கிரஸ் தலைவர் சத்தியமூர்த்தி அய்யா...! விருதுநகர்க்கு அவர் ஒரு தடவை வந்தப்ப... காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த நாங்க எல்லோரும் அவரோட நின்னு க்ரூப் போட்டோ எடுத்துக்கிட்டோம்... எனக்குப் பக்கத்துல நின்னுட்டிருக்கிறவர் யார்ன்னு தெரியுதா?''

''காமராஜர் அய்யா மாதிரி தெரியுது...''

''அவரேதான்...! இந்த 1961-ம் வருஷத்துல நம் தமிழ்நாட்டுக்கு முதல் அமைச்சராய் இருக்கிற அதே காமராஜர்தான்...!''

சமையலறையிலிருந்து குரல் வந்தது.

''அவரு தமிழ்நாட்டுக்கு முதலமைச்சர் ஆயிட்டார். அவருக்குப் பக்கத்துல நின்னுக்கிட்

# நட்பே... நட்பே...



டிருந்த உங்க அப்பா இன்னும் பழைய பிரிண்டிங் மெஷினை வெச்சுக்கிட்டு பொழைப்பை நடத்தவே மூச்சு வாங்கிட்டிருக்கார்.''

சிவமணி நாடார், மகள் வள்ளியம்மையை ஏறிட்டார்.

''காமராஜர் கொள்கைப் பிடிப்போட காங்கிரஸ் கட்சிக்காகவும் நாட்டுக்காகவும் தன்னை அர்ப்பணம் பண்ணிக்கிட்டார். கல்யாணம் கூட பண்ணிக்க மாட்டேன்னு பிடிவாதமாய் இருந்து அதைச் சாதித்துக்காட்டியவர். நான் அப்படியா...? பேருக்குத்தான் கட்சியில் இருந்தேன். கல்யாணத்தையும் பண்ணிக்கிட்டேன். எனக்குன்னு சில கடமைகள் வந்து ஒட்டிக்கிச்சு. அதையெல்லாம் உதறிட்டுப் போக முடியுமா என்ன?''

''அதையெல்லாம் விடுங்கப்பா. உங்க பால்ய காலத்து சிநேகிதர் காமராஜர் இன்னிக்கு தமிழ்நாட்டின் முதல் அமைச்சர். அவருக்கு நீங்க அழைப்பிதழ் கொடுத்தா என்னோட கல்யாணத்துக்கு வந்து ஆசிர்வாதம் பண்ணுவாரா...?''

''என்னோட மனசுக்குள்ளேயும் அந்த ஆசை இருக்கும்மா. ஏன்னா காமராஜர் மத்த தலைவர்கள் மாதிரியில்லை. பழசையெல்லாம் மறக்காதவர். அடுத்த வாரம் மதுரைக்கு ஏதோ ஒரு கட்டடத் திறப்பு விழாவுக்கு வர்றாராம். பயணியர் விடுதியில்தான் தங்கியிருப்பாராம். நான் போய்ப் பார்த்து அழைப்பிதழைக் கொடுத்துட்டு வரலாம்ன்னு இருக்கேன்.''

''கொடுத்தா அவர் உடனே சாரட் வண்டியில் புறப்பட்டு உங்க பொண்ணு கல்யாணத்துக்கு வந்துடுவாராக்கும்?'' -நெருப்பாய் சொர்ணம்.

''ஏம்மா... இப்படிப் பேசறே?''

''வேற எப்படி பேசச் சொல்றே...? அவர் முதலமைச்சராய் வானத்துல இருக்கார். ஏதோ ஒரு காலத்துல சிநேகிதராய் இருந்திருக்கலாம். அந்த ஒரு உரிமையை மட்டும் வெச்சுக்கிட்டு கல்யாணத்துக்குக் கூப்பிடப் போனா மூஞ்சியில கரியைப் பூசிட்டுத்தான் வரணும்.''

''அப்படியொரு நிலைமை எனக்கு ஏற்படாது சொர்ணம். ஏன்னா காமராஜரைப் பற்றி நல்லாத் தெரியும்...''



உன் பெயரை
அசைபோடுகிற
விலங்கினம்
நான்...

என் முகம்
அழகானதாய்
தெரிகிறது
உன் முகக் கண்ணாடியில்

- தமிழ்நாயகி

சொர்ணம் கேலியாய்ச் சிரித்தாள். ''மொதல்ல உங்களை உள்ளே விடறாங்களான்னு பார்க்கலாம்...!''

சொர்ணம் சொன்னது போலவே மதுரை பயணியர் விடுதியில் தங்கியிருந்த முதலமைச்சர் காமராஜரைப் பார்க்கவே பெரிய அளவில் பிரயத்தனம் எடுக்க வேண்டியிருந்தது. கோரிக்கை மனுக்களோடு பொதுமக்கள், ஃபைல்களோடு அதிகாரிகள், பூங்கொத்துக்களோடு பெரிய மனிதர்கள் என்று ஒரு பெரிய பட்டாளமே காத்துக் கொண்டிருந்தது.

''கல்யாணப் பத்திரிகையை எல்லாம் வாங்க சி.எம்.முக்கு நேரமில்லை... போய்யா... அந்தப் பக்கம்!'' என்று ஒரு போலீஸ் அதிகாரி சிவமணி நாடாரைப் பிடித்துத் தள்ளி விட்டார். அதையும் பொறுத்துக் கொண்டு பொதுமக்களோடு மக்களாய்க் காத்திருந்து, கோரிக்கை மனு கொடுப்பது போல் கல்யாணப் பத்திரிகையை நீட்டினார் சிவமணி நாடார். அவரைப் பார்த்ததும் பதறிவிட்டார் காமராஜர்.

''சிவமணி... நீங்களா..? என்னைப் பார்க்கணும்ன்னா நேரடியா உள்ளே வந்திருக்கலாமே...? இவ்வளவு நேரம் வெளியே எதுக்காக காத்திருக்கணும்ன்னேன்?''

''கூட்டம் அதிகம்... அதான் முடியலை...''

''சரி... சரி... உள்ளே வாங்க...'' தோளில் கை போட்டு உள்ளறைக்குக் கூட்டிப் போனார் காமராஜர். பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக்கொண்டு கேட்டார்.

''யாருக்குக் கல்யாணம்?''

''பொண்ணு வள்ளியம்மைக்கு... நீங்க வந்து ஆசிர்வாதம் பண்ணணும்...!''

''ஆசிர்வாதம்தானே...! இப்பவே பண்ணிடறேன். அதுக்கு நேர்லதான் வரணுமான்னேன்?''

சிவமணியின் இருதயத்துக்குள் ஏதோ ஒன்று முறிந்த மாதிரியான உணர்வு.



**"ஆசிர்வாதம்தானே...! இப்பவே பண்ணிடறேன். அதுக்கு நேர்லதான் வரணுமான்னேன்?"**

''வந்தா... சந்தோஷப்படுவேன். எனக்கும் என்னோட உறவு ஜனங்களுக்கும் கொஞ்சம் பெருமையாய் இருக்கும்.''

''அப்படியெல்லாம் வர முடியாதுன்னேன். நான் என்ன இன்னிக்கு சாதாரண ஆளா...? இந்தத் தமிழ்நாட்டுக்கு முதல் அமைச்சர். தலைக்கு மேல் ஆயிரம் வேலை கிடக்கு. எல்லாமே பொது மக்கள் நலன் சம்பந்தப்பட்ட வேலை. ஒரு தமிழ்நாட்டு முதலமைச்சர் அரசாங்க வேலைகளைக் கவனிக்காம ஊர்ல நடக்கிற கல்யாணங்களுக்குப் போயிட்டிருந்தா ஜனங்க என்ன நினைப்பாங்க...? உங்க பொண்ணுக்கு என்னோட ஆசிர்வாதம் எப்பவும் உண்டு. காப்பி சாப்பிடறீங்களா?''

''வே... வேண்டாம்...!'' உடைந்து போன உள்ளத்தோடு தடுமாற்றமாய்

எழுந்தார். ''உங்களைப் பார்த்ததுல... ச... ச... சந்தோஷம்... வர்றேன்...!''

''எனக்கும் சந்தோஷம்தான்னேன்... போய்க் கல்யாணத்தை நல்லா நடத்துங்க...!''

காமராஜர் கைகூப்பி விட்டார்.

திருமண நாள்... கல்யாணச் சத்திரத்தில் கூட்டம் நிரம்பியிருந்தது. முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டிருக்க, கல்யாண மேடையில் தாரைவார்த்துக் கொடுப்பதற்காக நின்றிருந்த சிவமணி நாடாரை நோக்கி, பேண்ட் சர்ட் அணிந்த ஒரு நபர் வேகவேகமாய் வந்தார். நெருங்கினார். ''அய்யா...!''

''என்ன...?'' சிவமணி நாடார் நிமிர்ந்தார்.

''நான் முதலமைச்சரோட பி.ஏ. உங்க வீட்டுக் கல்யாணத்துக்கு முதலமைச்சர் வந்துட்டிருக்கார். உங்ககிட்டே தகவல் சொல்லச் சொன்னார்.''

உடம்பு முழுவதும் பதற்றம் தொற்றிக்கொள்ள, சிவமணி நாடார் மண்டப வாசலுக்கு ஓடினார்.

முதலில் ஒரு போலீஸ் ஜீப் வந்து நிற்க, பின்னாலேயே வெள்ளை நிற அம்பாசிடர் காரில் காமராஜர் வந்து இறங்கினார்.

கண்களில் பனித்துவிட்ட நீரோடு கைகூப்பிய சிவமணி நாடாரின் தோளில் கைபோட்டார் காமராஜர்.

''என்ன தாலி கட்டியாச்சா?''

''இ... இ... இல்ல... இனிமேல் தான்...'' காமராஜரைப் பார்த்ததும் மண்டபத்தில் இருந்த ஜனங்கள் ஆர்ப்பரிக்க, காமராஜர் சிவமணி நாடாரிடம் பேசிக்கொண்டே கல்யாண மேடையை நோக்கி நடந்தார்.

''சிவமணி! உங்களுக்கு என் மேல கோபம் இருக்கும். நான் அன்னிக்கு அப்படிப் பேசாம உங்க பொண்ணு கல்யாணத்துக்கு வர்றேன்னு சொல்லியிருந்தா நீங்க என்ன பண்ணியிருப்பீங்கன்னு சொல்லட்டுமான்னேன். இன்னும் ஒரு பெரிய தொகையை வெளியிலிருந்து கடனாய் வாங்கி ரொம்பவும் ஆடம்பரமாய் இந்தக் கல்யாணத்தை நடத்தத் திட்டம் போட்டிருப்பீங்க. என்னை வரவேற்கவும் பேனர் வைக்கவும் அதுல பாதிப் பணத்தைச் செலவு பண்ணியிருப்பீங்க. எல்லாத்துக்கும் மேலாய் நான் கல்யாணத்துக்கு வர்றேன்னு சொல்லியிருந்தா உங்க நினைப்பு பூராவும் என்னைப் பத்தினதாவே இருக்கும். உங்க உறவு ஜனங்களைப் பத்தி நினைச்சுப் பார்க்க மாட்டீங்க. அதனாலதான் நான் கல்யாணத்துக்கு வரமாட்டேன்னு சொன்னேன். இப்ப புரிஞ்சுதான்னேன்...?''

அந்தச் சிறிய கல்யாண மண்டபம் ஆர்ப்பரித்துக்கொண்டிருக்க, மேடையில் நின்றிருந்த சொர்ணத்தின் கண்களிலும் நீர் பளபளத்தது. ●

**''உங்க மகனுக்குக் கல்யாணம் ஆனதைச் சொல்லவே இல்லையே? தெரிஞ்சா வந்திருப்பேனே!''**

**''பரவாயில்லே... இப்போ கூட நீங்க 'மொய்' எழுதலாம்.''**

**- ஜி. லக்ஷ்மிபதி**





காஞ்சிபுரம்
10.5.09

# வேண்டுகோள்!

நடமாடும் தெய்வமாகத் திகழ்ந்த ஸ்ரீகாஞ்சி மஹாஸ்வாமிகளின் 116-ஆம் ஆண்டு ஜெயந்தி விழா தொடர்பாக 25ஆம் ஆண்டு வெள்ளிவிழா ஆண்டாக வேத சாஸ்திர வாக்கியார்த்த சதஸ் நிகழ்ச்சிகள் 4.6.09 முதல் 7.6.09 வரை ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் சங்கரமடத்தில் நடக்க உள்ளது. 60க்கும் மேற்பட்ட பிரபல சாஸ்திர பண்டிதர்கள் கலந்து கொள்ள உள்ளனர். இந்நிகழ்ச்சியின் இறுதி நாளன்று ஆசார்ய ஸ்வாமிகளின் திருக்கரங்களால் கலந்து கொள்ளும் பண்டிதர்களுக்கு ரொக்க சம்பாவணைகளுக்கு நன்கொடைகளை அளிக்க விருப்பமுள்ளவர்கள் அமைப்பாளர் கே.எஸ்.சீனுவாசன், முன்னாள் கேஷியர், ஸ்ரீசங்கரமடம், 56-58, தும்பவனம் தெரு என்ற விலாசத்துடன் தொடர்பு கொண்டு செக், மணியார்டர் மூலம் நன்கொடைகளை அளிக்கலாம். தொலைபேசி : 9884880490

## கண்ணதாசன் காவியம்

**நி**லாச்சாரல் இணையதளத்தில் 'கண்ணதாசன் எனும் காவியம்' என்ற தலைப்பில் ஐம்பத்தொரு கட்டுரைகளை வெளியிட்டு, அவரின் ரசிகர்களுக்கு விருந்து படைத்திருக்கிறார்கள்.

தமிழாய்வு, சாதனையாளர்களின் நேர்காணல்கள், கதை, கவிதை, தொடர்கதைகளும் இத்தளத்தில் உண்டு.

அனுபவக் கட்டுரைகளும் நகைச்சுவைப் பகுதியும் சிறப்பம்சம். பல்சுவை என்ற பிரிவின் கீழ் சமையல், மருத்துவம், பழமொழிகளின் அணிவகுப்பு.

சீனப் பழமொழிகளில் ரசித்த ஒன்று...

'தன் கேள்விகளுக்குப் பதில் கிடைக்கும் என்பதற்காக ஒரு பறவை பாடுவதில்லை. தன்னிடம் ஒரு பாடல் இருப்பதால் அது பாடுகிறது.

பழமொழி என்றால் அறிவுரை மட்டுமில்லை; நல்ல கவிதையும் கூடத்தான்.

**(www.nilacharal.com)**

● ● ●

## அடுத்த சர்ச்சை ஆரம்பம்

**எ**திர்வினைகளுக்குக் கவலைப்படாமல் எதைக் குறித்தும் துணிந்து எழுதுபவர் ஜெயமோகன்.

இப்போது இவர் களத்தில் குதித்திருப்பது கிரிக்கெட்டுக்கு எதிராக.

''கிரிக்கெட் தேசிய அளவிலான போட்டி ஆட்டமாக இன்று முன்வைக்கப்படுகிறது. அதிலிருந்து விளையாட்டிலுள்ள கொண்டாட்டமே மறைந்து விட்டது. இன்று இந்தியா முழுக்கப் பரவியிருக்கும் கிரிக்கெட் மோகம் என்பது 'விளையாட்டு மீதான மோகம் அல்ல. அதுவொரு பொழுதுபோக்கு மட்டும்தான். ஒற்றை லாட்டரிப் போதை போன்ற ஒன்று மட்டுமே.

ஒரு த்ரில்லர் நிகழ்ச்சியில் உள்ள பரபரப்பு. இன்னும் சிலருக்கு சூதாட்டத்தின் வேகம்.

கூம்பிய தோளுடன் தொப்பையுடன் வெளிறிப்போன ஆசாமிகள் தங்கள் பொழுதுபோக்கு 'ஸ்போர்ட்ஸ்' என்று நம்புகிறார்கள். தொலைக்காட்சி முன் உட்கார்ந்திருப்பதிலும் 'ஸ்கோர்' கேட்டுத் தெரிந்துகொள்வதிலும் என்ன விளையாட்டு இருக்கிறது? விளையாடினால்தானே அது விளையாட்டு' என்று சரமாரியாக கிரிக்கெட்டை வசை பாடியிருக்கிறார்.

'விளையாட்டு ஆனந்தத்தின் பொருட்டு மட்டுமே விளையாடப்பட வேண்டும். அப்போதுதான் அது விளையாட்டு. பணத்துக்காக, புகழுக்காக, தேசப் பெருமிதத்துக்காக, சாதனைக்காக ஆடப்

## குப்புறப்படுத்தா..

படுவது விளையாட்டல்ல. அது ஒருவகை தொழில் அல்லது சண்டை. வென்றவரும் தோற்றவரும் உட்பட ஆடிய அனைவரும் மகிழ்ச்சியை அடையும்போது மட்டுமே அது விளையாட்டு.''

ஜெயமோகனின் விமர்சனம் கிரிக்கெட் ரசிகர்களுக்கு வருத்தமாக இருக்கலாம். இருந்தாலும் அவர் சொல்வதைக் கொஞ்சம் காதில் போட்டுக்கொள்வதில் தவறில்லை.

(www.jeyamohan.in)

• • •

# சோம்பேறி!

பெட்ரும் ஜோதிடம்

**வ**லைப்பூக்களில் வெளிவரும் சிறந்த கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்து அறிமுகப்படுத்தி வருகிறது தமிழிஷ் என்ற இணையத்தளம். செய்திகள், வீடியோ படங்கள், இலங்கை மற்றும் தேர்தல் நிலவரங்களும் இத்தளத்தில் உண்டு.

பொழுதுபோக்கவும் சுவாரஸ்யமான படைப்புகள் பல உண்டு.

தூக்கத்தைப் பற்றிய ஆய்வு முடிவொன்றை வெளியிட்டிருக்கிறார்கள்.

குப்புறப்படுத்துத் தூங்குபவர்கள், சோம்பேறித்தனம் மிகுதியாக உள்ளவர்கள். உழைப்பில் ஆர்வம் இல்லாதவர்கள். தங்கள் வேலையின் மீது பற்றின்றி இருப்பவர்கள்.

சுருண்டு படுத்துத் தூங்குபவர்கள், கோழைகள். எப்போதும், எதற்கும், எதிலும், பிறர் ஆதரவை நாடி நிற்பார்கள்.

மல்லாந்து படுத்துத் தூங்குபவர்கள் தன்னம்பிக்கை மிக்கவர்கள். பொது நலனில் அக்கறை கொண்டவர்கள். பிறரை எளிதில் கவரும் ஆற்றல் கொண்டவர்கள்.

அதுசரி... நான் எதிர்பார்த்த ஒன்றுக்குப் பதில் கிடைக்கவில்லை. பஸ்ஸிலோ, ரயிலிலோ பக்கத்திலிருப்பவர் மீது சாய்ந்து கொண்டு தூங்குபவர்கள் எப்படிப்பட்டவர்கள்? சுயநலவாதிகள் என்பது எனது அனுபவ அபிப்ராயம். இருக்கை கிடைக்காமல் நின்றுகொண்டே தூங்குபவர்கள் அப்பாவிகள். அதுவும் அனுபவமே. உங்களுக்கு எப்படி?

(www.tamilish.com)

• • •



# மயங்கிவிழுந்த லதா மங்கேஷ்கர்

முத்துமாணிக்கத்தால் மாப்பிள்ளை என்றழைக்கப்படும் வெங்கடாசலம் வேட்டைக்காரன்புதூரிலேயே இருப்பவர். நகைச்சுவை உணர்வும் கலகலப்பான பேச்சும் இவர் கூடப்பிறந்தவை. மச்சான் - மாப்பிள்ளை உறவு முறைக்காரர்கள் உரிமையுடன் கேலி பேசிக் கொள்வது உலகெங்கும் உள்ள முறைதான். குறிப்பாக கொங்கு மாவட்டத்தில் இது மிக அதிகம். இதை நம்முடைய இலக்கியங்கள் 'மைத்துனக் கேண்மை' என்று பாராட்டிப் பேசுகின்றன.

வெங்கடாசலம் - முத்துமாணிக்கம் இடையே அத்தகைய மைத்துனக் கேண்மையைப் பார்க்கலாம். சிவாஜியும் அவரை 'மாப்பிள்ளை' என்றுதான் அழைப்பார்.

ஒருமுறை, சூரக்கோட்டைக்குப் புறப்பட்ட வெங்கடாசலம் தொலைபேசியில் அழைத்தபோது, சிவாஜி தூங்கிக்கொண்டிருந்தார். ''வேட்டைக்காரன்புதூரிலிருந்து வெங்கடாசலம் மாப்பிள்ளை கூப்பிட்டதாகச் சொல். இரவு உணவுக்கு அங்குவந்து சேர்ந்துவிடுவேன்'' என்று அங்கு காவல் வேலை பார்த்த நேபாளி ஒருவரிடம் வெங்கடாசலம் தெரிவித்தார். அந்த நேபாளியின் நினைவில் இந்த நீளமான வாசகம் தங்கவில்லை. 'வேட்டைக்காரன்புதூர் - மாப்பிள்ளை' என்ற இரண்டு வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் 'வெங்கடாசலம் மாப்பிள்ளைதான் அழைத்திருக்க வேண்டும்' என்று சரியாகக் கணித்தார் சிவாஜி.

அந்த அளவுக்கு முத்துமாணிக்கத்தின் உறவினர்களைத் தம்முடைய உறவினர்களாகவே வரித்துக்கொண்டார் அவர்.

இந்த நேரத்தில் உருவான படம் 'பாசமலர்'. கேரளாவைச் சேர்ந்த கே.பி.கொட்டாரக்கரா என்ற கதாசிரியரின் கதை அது. படத்தின் உச்சக் காட்சியில் அண்ணனும் தங்கையும் இறந்துபோகிற காட்சி, காண்பவர்கள் இதயங்களில் எல்லாம் கல்லாய்க் கனத்தது.

கோப்பெருஞ்சோழனுடன் உயிர்விட்ட பிசிராந்தை - நட்பின் இலக்கணம். பாண்டியன் நெடுஞ்செழியனுடன் உயிர்விட்ட கோப்பெருந்தேவி - கற்பின் இலக்கணம்.

'பாசமலர்' படத்தில் தமையனும் தங்கையும் உயிர்விடும் காட்சி - சகோதர பாசத்தின் இலக்கணம். இப்படி நடக்குமா, இது மிகையான சித்திரிப்பா என்ற கேள்விகளுக்குப் பதில் சொல்வது போல் ஒரு சம்பவம் நடந்தது.

மரபின்மைந்தன் முத்தையா

திரையுலகில் பெருமை வாய்ந்த தயாரிப்பாளராகப் புகழ்பெற்றுத் திகழ்ந்தவர் ஜுபிடர் சோமு.

அவர் இறந்தபோது, அவருடனேயே இருந்த அவரது மகள் மேலே விழுந்து அழுதார். அழுத பெண்ணை ஆறுதல் சொல்லித் தூக்கியவர்கள் அதிர்ந்தார்கள். ஏனெனில், அப்பாவின் மார்பில் விழுந்த அந்தப் பெண்ணும் இறந்திருந்தார். இது பாசமலரின் உச்சக் காட்சி யதார்த்தமானதுதான் என்பதை உறுதி செய்தது.

சிவாஜி மீதும் முத்துமாணிக்கம் மீதும் உயிருக்குயிரான சகோதர பாசம் கொண்டிருந்தவர்கள் லதா மங்கேஷ்கரும் அவரது குடும்பத்தினரும். லதா, மீனா, உஷா, ஆஷா ஆகிய சகோதரிகளுக்கு இருதயநாத் என்ற தம்பியும் உண்டு. அவர் ஓர் இசையமைப்பாளர்.

மராட்டிய சிவாஜியின் மீது வைத்திருந்த மதிப்பையும் பக்தியையும் சிவாஜி மீதும் கொண்டிருந்தது அந்தக் குடும்பம். பல நேரங்களில் சிவாஜியின் இல்லத்தில், தங்களுக்கென்றே பிரத்யேகமாக லதா மங்கேஷ்கர் பாடிய மீரா பஜன் கேட்டுத் தங்களை மறந்திருக்கிறார்கள் சிவாஜி கணேசனும் முத்துமாணிக்கமும்.



**தங்களுக்கென்றே பிரத்யேகமாக லதா மங்கேஷ்கர் பாடிய மீரா பஜன் கேட்டு தங்களை மறந்தார்கள் சிவாஜி கணேசனும் முத்துமாணிக்கமும்.**



இவ்வளவு அழுத்தமான காட்சி அவசியம்தானா, படம் பார்க்கும் தாய்மார்கள் தாங்குவார்களா என்று விவாதம் எழுந்து, கடைசிக் காட்சியை மாற்றலாம் என்று பேச்சு எழுந்தபோது, அதனை உறுதியாக எதிர்த்து நின்றவர் முத்துமாணிக்கம். 'இப்படியோர் உணர்ச்சியின் உச்சம் ஒன்று உண்டு என்றால் அதனை எல்லோரும் பார்க்கட்டும்' என்று அடித்துச் சொன்னவர் அவர்.

பிறகு அதே படம் இந்தியில் 'ராக்கி' என்ற

**வேட்டைக்காரன்புதூர் மாப்பிள்ளை என்றதும் 'வெங்கடாசலம் மாப்பிள்ளை'தான் என்று கணித்தார் சிவாஜி!**

பாசமலர் படத்தின் உருவாக்கம் இறுதி நிலையை எட்டியிருந்தபோது சென்னை வந்திருந்த லதா மங்கேஷ்கர், அந்தப் படத்தைப் பார்க்க வேண்டுமென்று விரும்பினார். அப்போது சென்னையில் பெரும் புகழோடு திகழ்ந்த நாராயண் கம்பெனியில் பிரிவியூ தியேட்டரில் லதா மங்கேஷ்கர் படம் பார்க்க ஏற்பாடானது.

அவரை அழைத்துச் சென்றிருந்தார் முத்துமாணிக்கம். கடைசியில், 'கை வீசம்மா கை வீசு' பாடிவிட்டு சிவாஜியும் சாவித்திரியும் இறந்து போகிற காட்சி திரையில் ஓடிக்கொண்டிருந்தபோது தோளில் யாரோ சாய்வது போலிருக்க, திரும்பிப் பார்த்தார் முத்துமாணிக்கம். லதா மங்கேஷ்கர் மயங்கி விழுந்திருந்தார். மருத்துவர்களை வரவழைத்து சிகிச்சை கொடுத்து அவரை நினைவுலகுக்குக் கொண்டுவர வேண்டியிருந்தது.

பெயரில் எடுக்கப்பட்டது. சிவாஜி நடித்த பாத்திரத்தை ஏற்று நடிக்க இந்தி உலகின் புகழ்பெற்ற நடிகர்கள் பலரும் தயங்கினர். மிகுந்த தயக்கத்துக்குப் பிறகு ஒப்புக் கொண்டவர் அசோக்குமார்.

'பாசமலர்' உருவான அதே நேரத்தில் 'விடிவெள்ளி' படத்தையும் எடுத்தார்கள். இயக்குநர் ஸ்ரீதர் குழுவினரின் உருவாக்கத்தில் அந்தப்படம் அதே நேரத்தில் உருவாகிக் கொண்டிருந்தது.

(தொடரும்)

ஆளும்கட்சியினர் நடத்திய எலெக்ஷன் கலெக்ஷனால் மிகவும் நொந்து போயிருக்கிறார்கள், மதுரையிலுள்ள வியாபாரப் பிரமுகர்களும், தொழிலதிபர்களும். குறிப்பாக ஜவுளி மற்றும் நகை வியாபாரிகளை முக்கியப் பிரமுகரின் அடியாட்கள் பிழிந்து எடுத்துவிட்டார்களாம். ''பகல் கொள்ளையாகப் போய்விட்டதே'' எனப் புலம்புகிறார்கள். இந்த நிலையில் மதுரையிலுள்ள மூன்றெழுத்து பாரம்பரிய நிறுவனம் இரண்டு கோடி தேர்தல் நிதியாக அழுததாம். ''அண்ணன் ஐந்து கோடி கேட்டார்'' என்றார்களாம் உடன்பிறப்புகள். விஷயம் நிறுவனத் தலைவருக்குப் போயிற்று. ''வேண்டுமென்றால் வாங்கிக் கொள்ளச் சொல்லுங்கள்... இல்லையென்றால் ஆளைவிடுங்கள்'' என்று கைவிரித்து விட்டாராம் நிறுவனத்தலைவர். அதிர்ந்து போனார்கள் அண்ணனின் ஆட்கள்.

லடைய வைத்து விட்டார்களாம். ''தலைவருக்கு நம்பிக்கையுடன் பணியாற்றினேன்; எனக்கே தண்ணிகாட்டி விட்டார்கள்'' என்று புலம்புகிறார் சென்னையில் போட்டியிட்ட பெண் பிரமுகர்.

மதுரையில் போலீஸ் கமிஷனராகப் போவதென்றாலே, நியாயமான அதிகாரிகள் தயங்குவது வாடிக்கை. அதே சமயம் துணிந்து சென்று சாதகமாகச் செயல்படு

## காதைக் கொடுங்க

# விரிசலில் தமிழக பா.ஜ.க.?

* சி.பி.ஆர்.



* திருநாவுக்கரசர்





* இல.கணேசன்

மத்திய அரசு பா.ஜ.க. கைக்கு வருகிறதோ இல்லையோ... தமிழ்நாட்டு பா.ஜ.க.வில் பிளவு வருவது நிச்சயம் என்கிறார்கள். ஏற்கெனவே சி.பி.ராதாகிருஷ்ணன் போன்றோர் தமிழகத் தலைமைக்குச் சவால்விட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதுவரை அமைதியாக இருந்த திருநாவுக்கரசரும் கடுப்பைக் காட்டத் துவங்கி விட்டாராம். விரிசல் வந்ததற்கு லேட்டஸ்ட் காரணம் தேர்தல் நிலை பங்களிப்புதான். மகளிர் அணி அமைப்பாளர் ஒருவரும், முக்கியத் தலைவரின் உறவினர் ஒருவரும்தான் நிதியைக் கொடுக்கும் பொறுப்பில் இருந்தார்களாம். ஆனால் மிகவும் 'இழுத்துப் பிடித்து' பா.ஜ.க. வேட்பாளர்களை எரிச்ச

பவர்களை ஆளும் கட்சி கைவிடுவதில்லை. மதுரை மத்திய மற்றும் மேற்குத் தொகுதியில் இடைத் தேர்தலின்போது தேர்தல் கமிஷனின் ஆணையின் பேரில் மாற்றப்பட்ட காவல் ஆணையாளர்கள் சிதம்பரம் மற்றும் சுப்பிரமணியம். தேர்தல் முடிந்த பிறகு மீண்டும் அதே போஸ்டிங் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. இப்போது ஆளும் கட்சிக்கு ஆதரவாக இருந்ததால் நந்தபாலன் மாற்றப்பட்டிருக்கிறார். ''சந்தேகமே வேண்டாம். மீண்டும் அவரே இங்கு கமிஷனர்'' என் கிறார்கள். தேர்தல் கமிஷனை அவமானப்படுத்துவதில் தமிழக அரசுக்குத் தனிக் குஷி!

– ஸ்ரீநி

கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

உங்க மாவட்டத்துல
'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எது?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்கு?
- அசத்தலா போட்டுக்கிட்டு அதிரடி பண்ண சேலை.ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கே பெஸ்ட்டா கிடைக்கும்?
- உங்க மாவட்டத்தோட தலை போற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்ன்னு நினைக்கறீங்க?
- மிஸ்டர் மாவட்டம் யாருங்க! என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!



# விதை ஒன்று... ஆலமரம் ஆனது!

பசுமை போர்த்திய மலைக் குன்றுகளில் இயற்கை வீற்றிருக்க, அவற்றின் அடிவாரங்களில் கலைமகள் நிறைந்திருக்கிறாள். இயற்கையின் வசீகரச் சூழலில், முப்புறங்களிலும் மலைகள் சூழ, கலகலவென்று மாணவர்கள் குரல் ஒலிக்கிறது. மாணவச் செல்வங்களை சிகரங்களில் ஏற்றி நிறுத்த, இந்த கலசலிங்கம் பல்கலைக்கழகத்தில்தான் எத்தனை எத்தனை கல்வி நிலையங்கள்!

பெருநகரங்களிலும், அதன் புறநகர்ப் பகுதிகளிலும் உயர் கல்வி நிலையங்களை உருவாக்கினால்தான் மாணவர்களை ஈர்க்க முடியும்; தேவையான உள் கட்டமைப்பு வசதிகளைச் செய்து தர முடியும் என்றெண்ணி, ஏராளமான தனியார் பொறியியல் கல்லூரிகள் துவங்கப்பட்ட காலகட்டத்தில், மிகவும் பின்தங்கிய மலையடிவார கிராமப் பகுதியில் ஒரு சிறு விதை போல ஊன்றப்பட்டதுதான் கலசலிங்கம் பொறியியல் கல்லூரி.

இந்திய சுதந்திரப் போராட்ட வீரர் ஐயா கலசலிங்கம். கிருஷ்ணன் கோயில் அருகே இராமச்சந்திராபுரம் அவரது பூர்விக கிராமம். குடும்பச் சூழல் காரணமாக, உயர்கல்வியை அவரால் எட்டிப் பிடிக்க முடியவில்லை. அது ஆறாத ரணமாக அவர் மனசுக்குள் புகுந்திருந்தது. வாழ்க்கையில் அவர் படிப்படியாக உயர்ந்து பொருளாதாரத்தில் மேல் நிலைக்கு வந்தபோது, கல்விப் பணியில் ஈடுபட வேண்டுமென்கிற எண்ணம் வந்தது. தாம் பிறந்து - வாழ்ந்த கிராமத்தின் அருகிலேயே அதற்கான வாய்ப்புகளை அமைக்க வேண்டும் என்கிற உறுதி பிறந்தது உள்ளத்தில்.

1983ல் அருள்மிகு கலசலிங்கம் பாலிடெக்னிக் கல்லூரியும் 1984ல் அருள்மிகு கலசலிங்கம் பொறியியல் கல்லூரியும் துவங்கப்பட்டன. அதன் பின்னர் சிற்சில ஆண்டுகள் இடைவெளியில் வரிசையாக பல்வேறு கல்வி நிலையங்கள் பூத்தன. கலசலிங்கம் ஐ.டி.ஐ., கலசலிங்கம் பார்மஸி காலேஜ், கலசலிங்கம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கலசலிங்கம் கல்வியியல் கல்லூரி, கலசலிங்கம் ஆசிரியர்






பயிற்சி நிலையம், சென்னை - காழிப் பட்டூர் பகுதியில் ஆனந்த் பொறியியல் கல்லூரி மற்றும் ஆனந்த் மகளிர் ஆசிரியர் பயிற்சி நிறுவனம் என ஆலமரத்தின் பல விழுதுகளாக வேரூன்றியுள்ளன கல்வி நிலையங்கள்.

1984ல் துவங்கப்பட்ட பொறியியல் கல்லூரிக்கு, மத்திய அரசின் மனிதவள மேம்பாட்டுத்துறை, பல்கலைக்கழக அந்தஸ்தினை 2006ம் ஆண்டு வழங்கியது.

கலசலிங்கம் ஆனந்தம் அம்மாள் அறக்கட்டளையின் கீழ் இயங்கிவரும் கல்வி நிலையங்கள் ஒவ்வொன்றிலும் கிராமப்புற ஏழை எளிய மாணவ மாணவிகளுக்கு நல்வாய்ப்பும், சிறப்புக் கவனமும் அளிக்கப்படுகின்றன.

விளைவு? டி.கல்லுப்பட்டி கிராமத்து மாணவர் கலிஃபோர்னியா பல்கலையில் ஆய்வு மாணவராகச் சென்று வருகிறார். பேரையூர் கிராமத்து மாணவி பெல்ஜியம் நாட்டில் பணியில் அமர்த்தப்பட்டிருக்கிறாள். கிராமப்புற மாணவ மாணவியர்க்கு எட்டாக் கனிகளாக இருந்து வந்துள்ள உயர் தொழில்நுட்பக் கல்வியும், அதன் வேலை வாய்ப்புகளும் அவர்கள் அனைவருக்குமே தற்போது கைக்கெட்டும் தூரத்தில். ○



"கனவு நனவாகி..."

"தென் தமிழகத்தில் முதன்முதலாக பல்கலைக்கழக அந்தஸ்து பெற்றது எங்கள் உயர் தொழில் நுட்பக் கல்வி நிலையம். இதனைச் சுற்றிலுமுள்ள இருநூற்றுக்கும் மேற்பட்ட கிராமங்களின் மாணவ - மாணவியர் முழுமையாகப் பயனடைந்து வருகின்றனர். வெளி மாவட்ட, வெளி மாநில மாணவ மாணவியரும் பல்கலையின் கல்வித்திறன் ஆற்றல் அறிந்து வந்து சேர்கின்றனர்.

எட்டாவது தேர்ச்சி பெற்றவர் இங்கு ஐ.டி.ஐ. சேர்ந்து பயன் அடையலாம். எட்டாம் வகுப்பு முதல், கல்லூரியில் இளங்கலை தேர்ச்சி பெற்றவர்கள் வரை இங்கு வந்து உயர் கல்வி மற்றும் தொழிற்கல்வி பயிலலாம். முதுகலை தேர்ச்சி பெற்றவர்கள் ஆய்வுப் படிப்புகளில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளலாம். காரணம், கலசலிங்கம் பல்கலைக்கழகத்தின் ஆய்வுத்துறை சர்வதேசத் தரம் வாய்ந்தது. என் இளமைக் காலத்தில் நான் கண்ட கனவு, தற்போது நனவாகி நிகழ்ந்து வருகிறது!" எனச் சொல்கிறார் கலசலிங்கம் பல்கலைக் கழக வேந்தர், இந்தப் பல்கலைக் கழகத்தைத் துவங்கிய சுதந்திரப் போராட்ட வீரர் தி.கலசலிங்கம். ○








# பாய்ந்து முன்னேறும் பயோடெக் ஆராய்ச்சி!

★ தேவை ப்ளஸ் டூவில் 60% மதிப்பெண். விஞ்ஞானம் மற்றும் கணிதம் முக்கியப் பாடம்.

★ பி.டெக். பயோ டெக்னாலஜி, பி.டெக். கெமிக்கல் இன்ஜினியரிங் நான்கு வருடம்.

★ எம்.டெக். பயோ டெக்னாலஜி - இரண்டு வருடம்

★ பார்மசூட்டிகல் பயோ டெக்னாலஜி- இரண்டு வருடம். பி.பார்ம் தேறியவர்கள், பி.டெக். பயோ டெக்னாலஜி தேறியவர்கள் இதில் சேரலாம்.

★ கலசலிங்கம் பல்கலையில் பி.டெக். பயோடெக்னாலஜி கடந்த மூன்று வருடங்களாக நூறு சதம் தேர்ச்சி! வேலை வாய்ப்பு நூறு சதம்!

★ உலகிலேயே மூன்றாவது இடத்தில் இருக்கும் ஐரோப்பிய கம்பெனியான Astra Zenecca எனப்படும் மருந்து ஆராய்ச்சி மற்றும் உற்பத்தி கம்பெனி பெங்களூரில் உள்ளது. கலசலிங்கம் பல்கலையின் எம்.டெக். மாணவர்கள் பலரும், அங்கு ஆராய்ச்சிப் பணியில் வேலையில் அமர்த்தப்பட்டுள்ளனர்.

★ பார்மசூட்டிகல் பயோ டெக்னாலஜி ட்ரக் மேனுபாக்சரிங் பிரிவில் பத்து மாணவர்கள் ஆய்வுகளில் ஈடுபட்டுள்ளனர்.

★ எம்.டெக். பயோ டெக்னாலஜி மாணவர்கள் மூன்று பேர் Ph.D. ஆய்வில் உள்ளனர். இதற்கென மத்திய அரசு ஒரு கோடி ரூபாய் நிதியுதவி தந்துள்ளது.

''சர்க்கரை நோயாளிகளின் கண் விழித்திரை பாதிப்பினைச் சமன் செய்தல் குறித்து எங்கள் மாணவர்கள் ஆய்வு செய்து வருகின்றனர். இதற்கென கால்நடைகளின் கண்களில் உள்ள செல்களைப் பிரித்தெடுத்து, பரிசோதித்து சரியான மருந்துகள் கண்டு பிடிக்கும் ஆய்வினில் ஈடுபட்டுள்ளனர். ஆய்வுகளின் முடிவில் வெற்றிகிட்டும் என நம்புகிறோம்!'' என்று வெளிச்ச விதைகளை மனத்தில் விதைக்கிறார் பயோ டெக்னாலஜி துறைத் தலைவர். ○








# சர்வதேச வலைப் பின்னல்!

TIFAC-Core in Network Engineering. இது தடையற்ற மின்சார வசதி, 24 Mbps கொண்ட இன்டர்நெட் இணைப்பு வசதி போன்ற உள்கட்டமைப்புகளைக் கொண்டு 1,15,000 சதுர அடி பரப்பளவில் பிரமாண்ட கட்டடத்தில் இயங்குகிறது. மத்திய அரசின் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப துறையின் MISSION REACH திட்டத்தின் கீழ் துவங்கப் பட்டது. இதற்காக மத்திய அரசு அளித்த ஐந்து கோடி ரூபாய், சர்வதேச நிறுவனங்கள் ஐந்து கோடி ரூபாய், பல்கலைக் கழக நிர்வாகம் ஐந்து கோடி ரூபாய் என மொத்தம் பதினைந்து கோடி ரூபாய் திட்டத்தில் உருவாகியுள்ளது TIFAC. நெட்வொர்க் டெக்னாலஜீஸ், நெட்வொர்க் செக்யூரிட்டி, எம்பெட்டட் நெட் வொர்க்கிங், பவர் சிஸ்டம் ஆட்டோமேஷன், சாப்ட்வேர் டெக்னாலஜீஸ், டெக்னாலஜி மேனேஜ்மெண்ட் என ஆறு குழுக்கள் குறிப்பிட்ட பகுதிகளில் (Specific Area) பயிற்சிக்கும் ஆய்வு மேற்கொள்ளவும் இயங்குகின்றன என்பது இதன் சிறப்பு. ○



### சென்னையில் கலசலிங்கம்...

கலசலிங்கம் பல்கலைக்கழகத்துக் கென தொடர்பு நிலையம் ஒன்று சென்னையில் இயங்கி வருகிறது. இது T.Nagar, North Usman Roadல் அமைந்துள்ளது. இரண்டு வகுப்பறைகள்; இரண்டு ஆய்வகங்கள். சென்னை மையத்தில் பிரபல பொறியியல் துறை வல்லுனர்கள் ஆற்றும் உரைகளை, வீடியோ கான்பரன்சிங் முறையில் கலசலிங்கம் பல்கலைக்கழக மாணவர்கள் நேரடியாகக் கண்டு விவாதங்களில் பங்கேற்கலாம்!



# அச்சம் தவிருங்கள்

டீக் கடை பெஞ்ச்களில் கூட, இன்று இதுதான் பேச்சு. 'கம்ப்யூட்டர் கம்பெனியெல்லாம் புட்டுக்கிட்டு போயிடுச்சாமில்ல. சம்பளம் எல்லாம் பாதிக்குப் பாதியா கொறைச்சுட்டாங்களாம். அதுவும் ஒரு கம்பெனியில மூணு மாசமா சம்பளமே தரலையாம். அம்புட்டுதான் சாஃப்ட்வேர் வேலையெல்லாம்!' என்று.

மாணவர்களையும் சரி, பெற்றோர்களையும் சரி... குழப்பம் குடை விரித்து மிரட்டுகிறது. ஐ.டி. எனப்படும் Information Technology கல்வித் துறை அவ்வளவுதானா? அதன் நிகழ்காலச் சரிவு நிஜம்தானா? எதிர்கால ஏற்றம் உறுதியானதா?

''குழப்பக் குடையை மடித்து வையுங்கள். சரிவும் இல்லை; அழிவும் இல்லை. ஒவ்வொரு தொழில் துறையிலும் அவ்வப்போது தோன்றி மறைகின்ற இடி மின்னல்களே இவை. சாதாரண மழையை விட அதிகமா அடைமழை மாதிரி கொட்டித் தீர்த்தா, வயல்ல நெல்லு பாதிக்கத்தான் செய்யும். அதுக்காக அடுத்த முறை நெல்லு பயிரிடாமல் போயிடுறோமா? இல்லையே! அதுபோலத்தான் இதையும் எடுத்துக்கணும். மத்தவங்க சொல்ற புள்ளிவிவரத்துக்கே வருவோம். இருபத்தைஞ்சு லட்சம் பேர் வேலை செய்யற ஐ.டி. துறையில, இருபத்தைஞ்சாயிரம் பேருக்கு

# டாக்டர் பட்டம்...

ஒரு பல்கலைக்கழகத்தின் ஆராய்ச்சிப் பிரிவு பலம் பெற சில வருடங்களாவது ஆகும். இந்தப் பொதுவிதி கலசலிங்கம் பல்கலைக்குப் பொருந்தாது! ஆரம்பத்திலிருந்தே இங்கே பி.எச்டி மாணவர்கள் ஆராய்ச்சிகள் மேற்கொண்டு டாக்டர் பட்டங்கள் பெற்று வருகின்றனர். அதற்கேற்ற பரிசோதனைச் சாலைகள்; அதி நவீனக் கருவிகள்; சர்வதேசத் தரத்தில் செயல்படும் ஆராய்ச்சிக் கூடங்கள் என்று வசதிகள் உள்ளன.

''எங்களுடைய Research Standard



* n-CARDMATH கணித ஆராய்ச்சி மையம் துவக்க விழா...




வேலை இழப்புனு சொல்றாங்க. வேலை செய்யறவங்கள்ல ஒரு சதம்தான் இது. உலகத்துல இன்னைக்கு எடுத்துக்கிட்டா ஒவ்வொரு துறையிலயும் வெளியே போற ஆள் இருக்கான். புதுசா உள்ளே வர்ற ஆள் இருக்கான். அதனால இதெல்லாம் ஒரு மாயைதான். அவ்வளவு ஏன்? 2000ல Y2Kன்னு ஒரு பிரச்னை வந்தது. அத்தோட அழிஞ்சு போச்சா ஐ.டி? இல்லியே! அது போலத்தான் இப்பவும். இன்னும் வீறு கொண்டு எழும் இந்தத் துறை. அதனால மாணவருக்கும் சரி. பெற்றோருக்கும் சரி. அச்சம் தவிருங்கள். அட்மிஷன் ஆகுங்கள்!'' என்கிறார் ஐ.டி. கல்வித் துறைத் தலைவர்.

வேலை வாய்ப்பு மற்றும் உயர்கல்வியில் உள்ள பல்வேறு வாய்ப்புகளைத் திறம்பட பயன் படுத்திக் கொள்வதற்காகக் கீழ்க்கண்ட குழுக் கள் அமைக்கப்பட்டு மாணவர்களுக்கு முதலாம் ஆண்டிலிருந்து பயிற்சி அளிக்கப் படுகிறது.

1. இந்தியாவில் மேல்படிப்பு - GATE பரீட்சைக்கான பயிற்சி

2. அயல்நாட்டில் மேல்படிப்பு - TOEFL/GRE பரீட்சைக்கான பயிற்சி

3. இந்தியா மற்றும் அயல் நாட்டில் MBA படிப்பு CAT மற்றும் GMATக்கான பயிற்சி

4. IAS, IPS, IFS போன்ற இந்திய அரசுப் பணிகளுக்கான Technical General Knowledge பயிற்சி

## கல்விக் குழுக்கள் வடிவமைப்பு!

மிகவும் கெடுபிடியானது. முதல் ஆண்டு கோர்ஸ் வொர்க் எக்ஸாம் பேப்பர் நான்கில் கட்டாயம் தேர்ச்சி. இரண்டாம் ஆண்டு (VIVA) ஒருங்கிணைப்புத் தேர்வு. இந்த இரண்டிலும் முழுமையாக கிளியர் ஆகி வந்தால்தான் ஆய்வு மாணவராக மூன்றாம் ஆண்டு தொடர முடியும். பி.எச்டி மாணவர் எழுதிய ஒரு கட்டுரை சர்வதேசத் தொழில் நுட்ப ஏடு ஒன்றில் அவசியம் பிரசுரம் பெற்றிருக்க வேண்டும். குறைந்த பட்சம் இரண்டு அல்லது மூன்று கட்டுரைகள் சர்வதேச ஏடுகளில் பிரசுரம் ஆகியிருக்க வேண்டும். அப்போதுதான் பி.எச்டி கிடைக்கும்.

மத்திய அரசு அளித்த மூன்று கோடி ரூபாய் நிதி உதவியுடன் n-CARDMATH (National Centre for Advanced Research in Discrete Mathematics) எனப்படும், கணித ஆராய்ச்சி மையம் இங்கு துவங்கப்பட்டது. இங்கு மாணவர்களின் ஆய்வுகள் பல பரப்புகளில் விரிகின்றன!'' என்கிறார் ஆய்வுத் துறை இயக்குநர்.

## கெடுபிடி அதிகம்!

# சும்மா விளையாட்டுக்கில்லே...



ஹாக்கி, கால்பந்து டென்னிஸ், கூடைப் பந்து, கைப்பந்து என தனித்தனியே தரமான மைதானங்கள். சர்வதேசத் தரத்துடன் கூடிய நவீன கருவிகளுடன் அமைந்த ஜிம். சகல வசதிகளுடன் உள் விளையாட்டு அரங்கு என்று ஒரு ஸ்போர்ட்ஸ் யுனிவர்ஸிட்டி அளவுக்கு வசதிகள்!

* ஆண்டுதோறும் அகில இந்திய அளவிலான பல்கலைக்கழகங்களுக்கிடையே 20 - 20 கிரிக்கெட் போட்டி நடத்தப்படுகிறது. அதற்கென முதல், இரண்டாம், மூன்றாம், நான்காம் பரிசுகளென மொத்தம் இரண்டு லட்ச ரூபாய் பரிசு அளிக்கப்படுகிறது. ஆனந்தம்மாள் நினைவு அகில இந்திய கிரிக்கெட் போட்டியாக இது நடைபெறுகிறது.

* இவை அனைத்திலும் மேம்பட்ட ஒரு போட்டி, மாரத்தான்! செப்டம்பர் 4, ஆனந்தம்மாள் நினைவு நாள். அவர் வாழ்ந்த கிராமமான எஸ். ராமச்சந்திராபுரத்திலிருந்து கலசலிங்கம் பல்கலைக்கழகம் வரை இந்த மினி மாரத்தான் போட்டி நடக்கிறது. பத்து கி.மீட்டர் தூரம்வரை நடைபெறும் இந்தப் போட்டியில், விருதுநகர் மாவட்டத்தில் உள்ள பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்களும் ஆர்வத்துடன் கலந்து கொள்கின்றனர். ○

கலசலிங்கம் பல்கலைக்கழகத்தின் மத்திய நூலகம் பிரமாண்டமாக அமைந்துள்ளது. அதன் இயக்கம் மலைக்க வைக்கிறது. 60,000 புத்தகங்கள். ஒரே நேரத்தில் முன்னூறு பேர் அமர்ந்து வாசிக்கக்கூடிய அளவுக்கு வசதிகள் கொண்ட மைய அரங்கு. அதில் நிலவும் நிசப்தம். புத்தகங்கள் எடுத்து வாசிக்கலாம். பதினான்கு நாட்கள் கெடுவுக்கு உறுதி தந்து புத்தகங்கள் கொண்டு செல்லலாம்.

லாபியில், ஆய்வு சார்ந்த புத்தகங்களுக்கென தனி இடம். ஞாயிறுகளில் வந்து குறிப்புகள் எடுத்துக் கொள்ளலாம். ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட எட்டாயிரம் அரிய புத்தகங்கள். பொறியியல், மருத்துவம், இலக்கியம் சார்ந்த புத்தகங்கள் இருக்கின்றன.

இது தவிர எஸ்சி, எஸ்.டி. மற்றும்

# அரிய நூல்க






ஏழை மாணவ மாணவிகளுக்கு ஆய்வுப் புத்தகங்களைத் துறைசார்ந்து, செமஸ்டர் தேர்வு வரை இலவசமாக முழு நேரமும் பயன்படுத்திக் கொள்ள உதவி புரிகிறது பல்கலை நிர்வாகம். ஒவ்வொரு செமஸ்டரும் முடிந்த பின்னர் குறிப்பிட்ட புத்தகங்களைக் கண்டிப்பாக நூலகத்தில் திரும்ப ஒப்படைக்க வேண்டும்.

அமெரிக்காவின் கார்னெகி மெலன் யுனிவர்சிட்டி ஐந்தாயிரம் அரிய புத்தகங்களை இந்த நூலகத்துக்கு வழங்கியுள்ளது. Universal Digital Library இங்கு அமைக்கப்பட்டுள்ளது. நூறு அல்லது ஐம்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட அரிய புத்தகங்கள் பற்றிய குறிப்புகளை வலைத்தளத்தில் பதிவுசெய்து, அந்தப் புத்தகப் பிரதிகளைப் பெற்றுள்ளனர். அந்த வகையில் எட்டாயிரம் அரிய புத்தகங்கள் இந்த நூலகத்துக்குக் கிட்டியுள்ளன. அவ்வப்போது வெளியாகும் online journalகளை நகலெடுத்து நூலகத்தில் சேமிக்கிறார்கள். அதனால் பொறியியல் துறையின் நிகழ்காலப் புதிய புதிய தொழில்நுட்பங்களை மாணவர்கள் தெரிந்து கொள்ள முடிகிறது. மொழி அறிவுக்கென ஆயிரம் புத்தகங்கள் இங்கு உள்ளன. இந்த மத்திய நூலகத்தின் வாயிலாகப் பயனடையாத மாணவர்களே கிடையாது என்று சொல்லும் அளவுக்கு எல்லா மாணவ-மாணவியரும் நூலகப் பயனாளிகளாக இருந்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. ○

# ள்; பெரிய பலன்கள்!





# பல்கலைக்குள் மௌனப் புரட்சி!

வாய் திறந்து பேச முடியாது. செவி மடுத்துக் கேட்க இயலாது. இவர்கள் பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றிருந்தால் போதும். உயர் தொழில்நுட்பக் கல்வியான பி.டெக். படிப்பில் இணைந்து கொள்ளலாம். இவர்களுக்கு மட்டுமென தனியாக ஆறு ஆண்டுகளுக்கான பி.டெக். பாடத் திட்டம் இங்கு உருவாக்கப்பட்டுள்ளது. தெற்காசிய நாடுகளிலேயே கலசலிங்கம் பல்கலைக் கழகத்தில் மட்டுமே வாய் பேசாத - செவித் திறன் குறைவுடையோர்க்கென பி.டெக். படிப்பு உண்டு. தமிழகம் மட்டுமல்லாது, வெளி மாநிலத்தவர்களும் இதில் சேர்ந்து பி.டெக். பயின்று வருகின்றனர். ○

# சிவப்புக் கம்பளம் விரிக்கிறோம்!




கடந்த ஆறு ஆண்டுகளாக இங்கு இயங்கி வருவது **'பண்ணாட்டு நிறுவன உறவுத் துறை'** - Corporate Relations Department.

ஆண்டொன்றுக்கு சராசரி 90 சதவிகிதத்துக்கு குறைவுபடாமல், உடனடி வேலை வாய்ப்புகள் பல்கலை வளாகத்தின் உள்ளேயே பண்ணாட்டு நிறுவனங்கள் அளித்து அவர்களை அள்ளிச் செல்கின்றன. இந்தியாவில் Corporate Relations Department உள்ள பல்கலைக்கழகங்கள் மிகக் குறைவு. இந்த வகையில் கலசலிங்கம் பல்கலையின் 'பண்ணாட்டு நிறுவன உறவுத் துறை' மிக வும் குறிப்பிடத் தக்கது! ○

எம்.பி.ஏ. துறையின் தாரக மந்திரமே இதுதான். We are job creators; not job seekers. நீங்கள் ஒரு தொழிலை உருவாக்குபவராகச் செயல்படுங்கள்; ஒருபோதும் வேலை தேடுபவராக மாறிவிடாதீர்கள். ஏனெனில் தொழிலை உருவாக்கும் ஒரு நபர், அதன் மூலமாக பத்து பேருக்கு - நூறு பேருக்கு - ஏன்? ஆயிரம் நபர்களுக்குக் கூட வேலை வாய்ப்பு அளிக்கலாம்.

''இந்தியா வல்லரசாக உயர வேண்டுமெனில், தேசம் முழுவதுமாக தொழில் முனைவோர்களை நிறைய உருவாக்க வேண்டும். அதனால் வேலை வாய்ப்புகள் பெருகும். எம்.பி.ஏ. பயில்பவர்களை அந்த முக்கிய கட்டத்துக்கு நகர்த்திச் செல்வதில் கலசலிங்கம் பல்கலைக்கழகம் முன்னிலை வகிக்கிறது!'' என சொல்லி ரகசிய வெற்றியின் யத்தை வெளிப்படுத்துகிறார் எம்.பி.ஏ. துறைத் தலைவர். ○



# எம்பி எம்பித் தேடாதே!




பொறியியல் துறையின் மூத்த தலைமகன் சிவில் இஞ்ஜினியரிங். இதற்குப் பின்னரே மெக்கானிகல் இன்ஜினியரிங், கம்ப்யூட்டர் சயின்ஸ், EEE, ECE, Information Technology, E and I ஆகியன பிறந்தன எனச் சொல்லப்படுகிறது.

ஒரு நாட்டின் வளர்ச்சித் திட்டங்களில் சிவில் இஞ்ஜினியரிங் பங்கு மிக முக்கியமானது. தவிர்க்கவே முடியாதது. இதில் தேர்ச்சி பெற்றவர்கள் சட்டென ஒரு தொழில் முனைவோராக ஆகி விடலாம்.

பதினொன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தேசத்தின் வளர்ச்சிக்கும், அதைச் சார்ந்துள்ள உள் கட்டமைப்பு திட்டங்களுக்கும் அதிக முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. அதனால் சிவில் துறை சார்ந்து வேலை வாய்ப்புகள் அதிகரித்துள்ளன. பொறியியல் படிப்புகளில் Evergreen department என்கிற செல்லப்

# மூத்த தலைமகன்!





அதிக முதலீடு வேண்டும் என்று பெரும் தொகை தேட வேண்டியதில்லை. தண்ணீர், கட்டடம், சாலைப் போக்குவரத்து, அணைக்கட்டு, விமான நிலையம், தொழிற்சாலைக் கட்டடங்கள் என இதன் எல்லை மிக விரிவானது.

பெயர் சிவில் துறைக்கு உண்டு. காரணம் என்றுமே அதற்கான தேவைகள் இருப்பது தான்! அதனால், கலசலிங்கம் பல்கலையில் நூறு சதம் தேர்ச்சி, நூறு சதம் வேலை வாய்ப்பு உறுதி!'' என்று உறுதியாக நம்பலாம். ○

# அசர வைக்கும்...



அரியர்ஸ் பேப்பர் இன்னும் இருக்கு என்கிற பேச்சுக்கே இடமில்லை இங்கு. அது எப்படி? எல்லா மாணவர்களும், எல்லா பேப்பர்களையும் முதல் தடவை எழுதி முடிக்கும்போதே அதில் பாஸாகி விடுகிறார்களா என்ன? அப்படி இல்லை!

உதாரணமாக, ஒரு செமஸ்டருக்கு ஆறு பேப்பர் எனில், தன்னுடைய மொழி அறிவு மற்றும் தன்னுடைய சப்ஜெக்ட் சார்ந்த அறிவுக்கேற்றாற்போல, தன்னால் எத்தனை பேப்பரில் சிறப்பாகத் தேர்வு எழுத இயலும் என நினைக்கிறாரோ, அத்தனை பேப்பர்களை மட்டும் ஒரு மாணவர் குறிப்பிட்ட செமஸ்டர் தேர்வுக்கென எடுத்துக் கொள்ளலாம். அவற்றில் மட்டும் அதிகக் கவனம் செலுத்தி உயர்ந்த விழுக்காடு பெறலாம்.

ஆனால், மீதம் உள்ள பேப்பரை அடுத்து வரும் செமஸ்டரில் சேர்த்து எழுத முடியாது. அவற்றுக்கென வகுப்புகள் தனியாக நடத்தப்படுகின்றன. சம்மர் டெர்ம் கோர்ஸ் என அவை அழைக்கப்படுகின்றன. அவற்றில் சேர்ந்து அந்தப் பிரிவுகளில் தேர்ச்சி பெற்று, அந்தந்த செமஸ்டருக்குரிய சப்ஜெக்டுகளை க்ளியர் செய்துவிடலாம். மிகுந்த கவனத்துடன் மாணவர்கள் அனைவரும் ஒவ்வொரு பாடத்திலும் சிறந்து விளங்கி, தேர்ச்சி பெறும் வகையில் இங்கு அகாடெமிக் சிஸ்டம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

மதிப்பெண்கள் நூற்றுக்கு இவ்வளவு என்று இறுதியாகக் குறிப்பிடுவதில்லை. CGPA (Cumulative Grade Point Average) எனப்படும் பாய்ன்ட் சிஸ்டம் இங்கு நடைமுறையில் உள்ளது. IITகளில் செயல்படுத்தப்படும் Relative Grading System இங்கு செயல்படுத்தப்படுகிறது.

அதுபோல அட்மிஷனுக்கு அறுபது சதம் அவசியம். 59.95 மதிப்பெண் பெற்றிருந்தால்கூட அட்மிஷன் தரப்படுவதில்லை. பின்னர் அகில இந்திய அளவிலான என்ட்ரன்ஸ் எக்ஸாமில் தேர்ச்சி பெற வேண்டும். அதற்குப் பிறகே கலசலிங்கம் பல்கலைக்கழகத் தில் சேர்க்கை.

"இவை மட்டுல்ல. Non-CGPA எனப்படும் Additional Requirement கடைப்பிடிக்கிறோம். நான்கு வருட சப்ஜெக்ட்கள் அனைத்திலும் தேர்ச்சி நிலைக்கான

கலசலிங்கம் பல்கலைக்கழகம் கலசலிங்கம் பல்கலைக்கழகம் கலசலிங்கம் பல்கலை

# அகடெமிக் சிஸ்டம்!






பாய்ன்ட் பெற்றிருக்க வேண்டும். Soft Skills, Leadership Quality, Social Commitments, Cultural Activities என பதின்மூன்று இதர பிரிவுகளில் குறைந்தபட்சம் இருபது கிரடிட் பெற வேண்டும். பல்கலையை விட்டு வெளிச் செல்லும் மாணவர்கள், உயர் தொழிற்கல்வி பட்டம் பெற்றவராக மட்டும் இல்லாமல், இந்தச் சமூகத்துக்குப் பயன்படும்படியான முழுமை மனிதனாக உலவிட வேண்டும் என்கிற உயர்ந்த நோக்கத்தில் எங்களின் அகாடெமிக் சிஸ்டத்தில் அதிகக் கவனம் செலுத்தி இயங்கி வருகிறோம்!'' என்கிறார் அகாடெமிக் சிஸ்டம் இயக்குநராக விளங்கும் மெக்கானிகல் இன்ஜினியரிங் துறைத் தலைவர். ○

## உலகளாவிய ஒருங்கிணைப்பு!

சர்வதேச அளவில் சிறந்து விளங்கும் கீழ்க்கண்ட பல்கலைக் கழகங்களுடன் கல்வி மற்றும் ஆராய்ச்சி சம்பந்தமாக கலசலிங்கம் பல்கலைக்கழகம் ஒப்பந்தம் செய்துள்ளது.

* கர்னகி மெலன் பல்கலைக்கழகம், அமெரிக்கா
* RWTH ஆக்கன் பல்கலைக்கழகம், ஜெர்மனி
* மல்டிமீடியா பல்கலைக்கழகம், மலேசியா
* பால் ஸ்டேட் பல்கலைக்கழகம், அமெரிக்கா
* ஒக்லகாமா பல்கலைக்கழகம், அமெரிக்கா
* நான்கை பல்கலைக்கழகம், சீனா
* ஜார்ஜ் டவுன் பல்கலைக்கழகம், அமெரிக்கா
* INM லீபெனிஷ் பல்கலைக்கழகம், ஜெர்மனி.



இதன் மூலம் இங்கு படிக்கும் மாணவர்கள் Semester Abroad என்ற படிப்பை மேற்கண்ட பல்கலைக்கழகங்களில் படிக்க வாய்ப்புள்ளது. இங்கு பணியாற்றும் பேராசிரியர்கள் கல்வி மற்றும் ஆராய்ச்சி சம்பந்தமாக இந்தப் பல்கலைக் கழகங்களுக்குச் சென்று வரவும் வாய்ப்புள்ளது. ○

* ஜெர்மானியப் பல்கலைக்கழகத்தில் எமது மாணவர்கள்



யூனியன் பேங்க் ஆஃப் இந்தியாவின் 24 மணி நேர ஏ.டி.எம் சேவையும், Core Banking வசதியுடன் கூடிய கிளையும் வளாகத்தில் உள்ளது.





இரண்டு சைவ உணவகங்கள் வளாகத்தில் செயல்பட்டு வருகின்றன. எழுதுபொருள் அங்காடி ஒன்றும் இயங்கி வருகிறது.

10.00 மணி முதல் 2.00 மணி வரை இயங்கும் தபால் நிலையமும், எஸ்.டி.டி பூத்களும், கூரியர் வசதியும் ஜெராக்ஸ் மையங்களும் வளாகத்தில் உள்ளன.




# இந்த வசதி போதுமா?

மாணவர்களுக்கென மூன்று விடுதிகள், மாணவிகளுக்கென மூன்று விடுதிகள். மொத்தம் நான்காயிரத்து நூறு மாணவர்கள்! ஹாஸ்டல் என்ற உணர்வு இல்லாமல் வீட்டு உணர்வில் திளைக்கும்படி விடுதி அறைகள் உள்ளன. உணவு மற்றும் தரக் கட்டணங்கள் நியாயமான dividing systemபடி வசூலிக்கப்படுகின்றன.








குளிர்சாதன வசதியுடன் கூடிய விருந்தினர் விடுதியும் வளாகத்தில் உள்ளது. 4 வி.ஐ.பி சூட்கள் இணைந்த 30 அறைகள் கொண்ட Trainee Hostel - ம் அமைந்துள்ளது. பெற்றோர்கள் மற்றும் முன்னாள் மாணவர்கள் தங்குவதற்கும் இங்கு வசதி செய்யப்பட்டுள்ளது.





சுவர் இருந்தால்தானே சித்திரம்! கல்வியோடு உடல்நலத்தையும் பேணும் விதமாக ஆண்கள், பெண்களுக்கான தனித்தனி ஜிம்கள் இயங்குகின்றன.

# இன்னும் கொஞ்சம் வேணுமா?

இருபத்தி நான்கு மணி நேர சேவையோடு இரண்டு ஷிஃப்டுகளில் ஹெல்த் சென்டர் இயங்குகிறது. 20 படுக்கைகள் இதில் உள்ளன. ஈ.சி.ஜி செக்கப், லேப் ரிப்போர்ட், ஊசி, மாத்திரை மற்றும் சிகிச்சை என அனைத்துமே இலவசம்.




* இணைவேந்தர் க.ஸ்ரீதரன்




"மாணவ - மாணவியர் ஒவ்வொருவரும் மெய்மை மிக்க மனிதராகத் திகழ வேண்டும் என்பதே பல்கலையின் நோக்கம். திறமையான பொறியாளர்களாக, மற்ற துறைகளிலும் திறமையானவர்களாக அவர்கள் வெளி வருவதுடன், தங்கள் கல்வியை இந்தச் சமூகத்துக்குப் பயன்படுத்தும் சிந்தனை உள்ளவர்களாக அவர்கள் இயங்க வேண்டும் என்பதே எங்கள் குறிக்கோள்!"

எனக் கூறுகிறார் இணை வேந்தர் க.ஸ்ரீதரன்.

# சுதந்திரம் - சுய நிர்ணயம்!

"எங்கள் பல்கலைக்கழகப் பாடத்திட்டம், பன்முகச் சிறப்புடையது. மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் நிறைய சுதந்திரம் அளிக்கிறது. மாணவர்கள் தாங்கள் எந்தத் துறையில் சிறப்புத் தகுதி பெற விரும்புகிறார்களோ, அதற்கேற்ப தேவையான பாடங்களை எடுத்துப் பயிலலாம். ஒரு மாணவன், அவனது விருப்பம் மற்றும் திறமைக்கேற்ப பாடங்களைத் தேர்வு செய்து கொள்ளலாம். மாணவன் தன்னுடைய ஆற்றலுக்கேற்ப ஒரு பருவத்தில் (செமஸ்டர்) அதிகப்படியான பாடங்களையும், ஒரு பருவத்தில் குறைந்த பாடங்களையும் எடுத்துக்கொள்ளலாம். வகுப்பறையில் பயிலும் அனைத்துப் பாடங்களையும் செய்முறையில் செய்து பழகும் வாய்ப்புகளுடனே பாடத் திட்டம் வடிவமைக்கப்பட்டுள்ளது. Relative Grading System முறை கையாளப்படுவதால், மாணவர்கள் கேள்வித்தாள் மாறுபாடு, ஆசிரியர்கள் பாடம் நடத்தும் முறை, கேள்வித்தாள் திருத்தும் முறைகள் போன்றவற்றால் பாதிக்கப்படுவதில்லை!" எனக் குறிப்பிடுகிறார் கலசலிங்கம் பல்கலைக்கழகத் துணைவேந்தர் தங்கராஜ்.

* துணைவேந்தர் தங்கராஜ்



செய்தித்தொகுப்பு: **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**







# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).

## வர்றோம்...

- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 15.06.09**

**கலக்க வருதுப்பா கல்கி**
**உதகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



# உடன்பிறப்பு

''டேய் சேகர்! எனக்கென்னவோ பயமா இருக்குடா! உண்மையைச் சொல்லிடலாம்''

''ஏம்மா... உன் பொண்ணுக்குக் கல்யாணம் ஆகணுமா... வேண்டாமா?''

''எல்லாம் அவ விதிடா... விதி...''

''அப்படிச் சொல்லாதே. விதியை மதியால வெல்லலாம்''

''எப்படிடா?''

''பொண்ணு பார்க்க வர்றவங்ககிட்ட ஒரே ஒரு அண்ணன் மட்டும்னு என்னைச் சொல்லிடு.''

''அப்ப பாலுவை?''

''பக்கத்து வீட்ல சொல்லி கொஞ்ச நேரம் பார்த்துக்கச் சொல்லு''

''சரிடா சேகர்... அப்புறம்...''

''சும்மா சும்மா தொண தொணன்னு பேசிட்டு இருக்காதே! எல்லாம் என் தலையிலதானே விழுது. என்னை பெக்காமலே இருந்திருக்கலாம். அப்பா போய்ச் சேர்ந்திட்டாரு. நானில்லே கஷ்டப்பட வேண்டியிருக்கு!''

சேகர் பாலுவை அண்ணன் என்று பார்ப்பதை மறந்து பல வருடங்கள் ஆகிவிட்டன. படித்துக் கொண்டிருந்த காலத்தில் சேகரின் நண்பர்கள் வந்தால், பாலு ஏதாவது உளறிக்கொண்டு வந்து கை தட்டுவான். அத்தனை சந்தோஷம். சேகர் விரட்டினாலும் போக மாட்டான். கூர்ம அவதாரம் போல் மூக்கு நுனியில் பெரிய மரு ஒன்று துருத்திக் கொண்டிருக்கும்.

'அம்மா இவனை இழுத்துக்கிட்டு போ' என்று சேகர் கத்துவான். அம்மா இழுத்துச் சென்றால், காலை தரையில் உதைத்து அடம்பிடிப்பான். சேகர் மட்டுமே வேலைக்குப் போவதால் அவனது சொற்களையும் செயல்களையும் பொறுத்துக் கொள்ள வேண்டிய நிர்பந்தத்தில் அக்குடும்பம் இருந்தது.

''ரேணுகா... மணி நாலு ஆயிடுச்சு. மாப்பிள்ளை வீட்டுக்காரங்க இப்ப வந்துடுவாங்க. சீக்கிரம் அலங்காரம் பண்ணிக்க.''

''அம்மா எனக்கு ஸ்வீட் கொடு.''

''ஏண்டி நானே கொஞ்சமாத்தான் வாங்கி வந்திருக்கேன்.''

''அதுக்கு இல்லைம்மா. வரப்போறவரு எனக்கு இருபத்தஞ்சாவது மாப்பிள்ளை.''- ரேணுகாவின் கண்களின் ஓரம் கண்ணீர் கசிந்தது.

''அழாதே ரேணுகா. எல்லாம் நல்லபடியா நடக்கும்''

பொண்ணு பார்க்க வந்தவர்களுக்கு ரேணுகாவை ரொம்பப் பிடித்துவிட்டது. அடுத்த வாரத்தில் ஒரு நாள் நிச்சயம் செய்து கொள்ளலாம் என்று பேசிக் கொண்டிருந்தபோது, தடதடவென்று ஓடி வந்தான் பாலு. அவர்கள் மீதம் வைத்திருந்த ஜிலேபிகளில் இரண்டை இரண்டு கைகளில் அள்ளிக்கொண்டான்.

''யாருங்க இது?'' என்றார்கள்.

என்ன சொல்வது என்று தோன்றாமல்

**மூக்கின் நுனியில் சிறிய மருவுடன் குழந்தை பருத்திருந்தது!**

## ஆர்.சுந்தரம்



கையைப் பிசைந்த சுந்தரி சேகரைப் பார்த்தாள். அவன் பற்களைக் கடித்துக் கொண்டிருந்தான்.

''ஏங்க கேக்க றோம்ல...''

ரேணுகா கண்களில் கண்ணீர் வழியச் சொன்னாள்.

''அது என் பெரிய அண்ணன்!''

வந்தவர்கள் அதிர்ச்சி அடைந்தனர்.

''இப்படியொரு அண்ணன் இருக்கறதை ஏன் மறைச்சீங்க?''

''இதுல மறைக்கறதுக்கு என்னங்க இருக்கு? நீங்க எங்க வீட்டுப் பெண்ணைத் தானே சம்பந்தம் பேச வந்திருக்கீங்க'' என்றான் சேகர்!

''கூடப்பிறந்தவங்க எத்தனை பேர்னு கேட்டப்போ உங்களை மட்டும் தானே உங்கம்மா சொன்னாங்க!''

''ஆமாங்க ஸார். இதுவரை வந்தவங்க அத்தனை பேர் கிட்டேயும் உண்மையைச் சொன்னோம். போய் லெட்டர் போடறோம்னு சொல்லிட்டுப் போனவங்கதான். நீங்கதான் பொண்ணை நிச்சயம் பண்ணலாம்னு சொன்னீங்க.''

''சரி... அப்ப உண்மயைச் சொல்லியிருக்கலாமே!''

''ஸார்! நீங்களே நினைச்சுப் பாருங்க. என் அண்ணனைக் காரணம் காட்டி என் தங்கை வாழ்க்கை பாழாயிட்டே இருக்குது. உங்க குடும்பத்துல இப்படி ஒரு பையன் இருந்தா என்ன பண்ணியிருப்பீங்க?''

''உண்மையைச் சொல்லியிருப்போம்.''

''ஸார் ஆயிரம் பொய் சொல்லியாவது கல்யாணத்தை நடத்தணும்னு சொல்லியிருக்காங்களே!''

''யாருய்யா அப்படிச் சொன்னது? சொன்னவன் நாக்கை இழுத்து வைச்ச

அறுக்கணும். நீங்க, சொன்ன ஒரு பொய்யே எங்களுக்குப் போதும். வர்றோம்.''

அவர்கள் போனதும் பக்கத்து வீட்டுக்கு ஓடினான், சேகர்.

''ஏங்க இந்த மாதிரி பண்ணிட்டீங்க. ஏன் அவனை அனுப்பிச்சிட்டீங்க?''

''இல்லைங்க! உப்புத் தண்ணி வருதுன்னு அதைப் பிடிச்சிட்டிருந்தோம். உங்கண்ணா தூங்கிட்டுதான் இருந்தாரு. எப்ப எந்திரிச்சு அங்க வந்தார்னு தெரியலை. ஏன்? என்னாச்சு?''

''வழக்கம்போல்தான்''

''உங்கண்ணாவை, பேசாம ஏதாவது மூளை வளர்ச்சி குன்றியோர் காப்பகத்தில் சேர்க்கறதுதானே!''

அன்றிரவு சேகர் ஒரு முடிவு எடுத்தான்.

**ம**றுநாள்.

''அம்மா பாலுவைச் சீக்கிரம் குளிக்க வைச்சு சாப்பாடு ஊட்டி விடு. நான் அவனைக் கூட்டிட்டு வெளியே போறேன்!''

''எங்க... டாக்டர்கிட்டயா?''

''ஆரம்பிச்சிட்டியா? சொன்னதைச் செய்.''

''சரிப்பா.''

பாலுவை அழைத்துக்கொண்டு சென்னைக்குப் பயணமானான். அங்கு புகழ் பெற்ற சேவை நிறுவனத்துக்குச் சற்று முன்னரே ஆட்டோவை நிறுத்தி இறங்கினார்கள். பின் ஆட்டோவை அனுப்பி விட்டான்.

''பாலு அதுக்குள்ள போயிடு. அங்க நிறைய பேர் இருக்காங்க. உன் கூட விளையாடுவாங்க.''

சந்தோஷமாக அதற்குள் ஓடிய பாலு, உடனே வெளியே வந்து சேகரைத் தேடி வீதிக்கு வந்தான். சேகர் எதிர்த்திசையில் வேகமாகக் கடந்து ஒரு ஆட்டோவை நிறுத்தி அதில் ஏறிக்கொண்டான். திரும்பிப் பார்க்க நினைத்தவன் திரும்பிப் பார்க்கவே இல்லை. அதிகாலை தனியே வந்த சேகரைப் பார்த்து அதிர்ந்தாள் சுந்தரி.

''சேகர் என்னடா? என்னாச்சு? பாலு எங்கடா?''

''அம்மா இனி அவனைப்பத்திக் கேட்காதே! இனி அவனால நமக்குப் பிரச்னை இல்லை.''

''டேய் அவனை என்னடா பண்ணினே சொல்லுடா?''

''அம்மா அவனை ஒண்ணும் செய்யலைம்மா... ஒரு ஆசிரமத்துல கொண்டு

போய் விட்டுட்டேன்.''

''எந்த ஊர்லடா?''

''ஏன் நீ போய் அழைச்சிட்டு வரப் போறியா?''

''டேய்... நான் உயிரோடு இருக்கிற வரை அவனைப் பார்த்துப்பேன்டா.''

''அம்மா அவன் ஒருவன்தான் உன் பிள்ளையா? நாங்க பிள்ளைகள் இல்லையா? எங்களுக்கும் வாழ்க்கை அமைய வேண்டாமா?''

'சட்' என்று நிமிர்ந்து பார்த்தாள் சுந்தரி.

''அப்ப உன் சுயநலத்துக்காக அவனை ஆசிரமத்திலே சேர்த்துட்டே இல்லே.''

''அம்மா அங்க பாலு மட்டும் இல்லே. நிறைய பேர் இருக்காங்க தெரிஞ்சுக்க''

''டேய் அவனுக்கு மாத்து சட்டை கூட நீ எடுத்துட்டுப் போகலையேடா?''

''அம்மா அவன் எங்க இருக்கான்னு சொல்ல மாட்டேன். நானே ஒரு நாள் கூட்டிட்டுப் போறேன். ரொம்பத் தொந்தரவு செய்தேன்னா, நான் தனியா போயிடறேன். என்னவோ பண்ணுங்க!''

'ப்ளஸ்டூவுடன் படிப்பு நிறுத்தப்பட்ட ரேணுகாவுக்கு என்ன வேலை கிடைக்கும்? கல்யாணம் பண்ணுவது எப்படி?' என்று யோசித்து யோசித்து அமைதியானாள்.

சில மாதங்களில் ரேணுகா திருமணம் ஆகிச் சென்றுவிட, சேகருக்கும் கல்யாணம் ஆனது. பாலுவைப் பற்றிச் சொல்லுவான் எனக் காத்திருந்தாள் சுந்தரி. அவன் பேசினால்தானே? ஒரு நாள் சண்டை போட்டு அவனை அழைத்துக் கொண்டு அந்த சேவை இல்லம் சென்று தேட, பாலு அங்கே இல்லை.

''அம்மா இந்த வாசலில்தான் விட்டுட்டு வந்தேன். அவனை உள்ளே போகச் சொன்னேன். அவனும் உள்ளே ஓடிப் போனான்ம்மா.''

''அடப்பாவி! என்கிட்ட அவனை ஆஸ்ரமத்தில் சேர்த்துட்டு வந்தேன்னு



''எங்கள் கட்சியில் கோஷ்டிகளே கிடையாதுன்னு அந்த மாநிலத் தலைவர் சொன்னது பெரிய சர்ச்சையை உண்டாக்கிடுச்சு.''

''என்னாச்சு?''

''எங்க கோஷ்டிகளெல்லாம் அவரோட கண்ணுக்கு கோஷ்டியா தெரியலையான்னு பத்து பதினைந்து கோஷ்டித் தலைவர்களும் பெரிசா சண்டைக்குப் போயிட்டாங்க!''

- சீர்காழி வி. ரேவதி

சொன்னது பொய்யா? என் புள்ளை என்ன ஆனான்னு தெரியலையேடா, இனி நான் உன் கூட வரமாட்டேன். நீ பண்ணின பாவத்துக்கு தெரிஞ்சோ தெரியாமலோ நானும் காரணமாயிட்டேன். உன் கூட வரமாட்டேன். இனி நான் இங்கேயே இருந்து மத்த குழந்தைகளுக்கு சேவை பண்ணப் போறேன்.''

சில மாதங்கள் கழிந்தன.

நர்ஸ், சேகரிடம் வந்து, ''ஸார் உங்களுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கு'' என்றாள்.

சேகர் சந்தோஷமாக எல்லோருக்கும் இனிப்புகள் வழங்கியவாறு வார்டுக்குச் சென்று தன் குழந்தையைப் பார்த்தான். மூக்கின் நுனியில் சிறிய மருவுடன் குழந்தை படுத்திருந்தது. ●

**கா**லை 8:45க்கு சென்னை வானொலியில் வீணை வித்வான் வசந்தகுமார் கச்சேரி. சங்கீத உலகில் அனைவரும் அறிந்த சுலோசனா பட்டாபிராமன் அவர்களுடைய மகன் வசந்தகுமார். அவருடைய மலையமாருதம் இதயத்துக்கு இதமாக இருந்தது என்றாலும் கச்சேரியை அவர், 'மேள ராகமாலிகை சக்கர'த்துடன் தொடங்கியது எனக்குப் பழைய நினைவுகளைக் கிளறியது. மகா வைத்தியநாத சிவன் இயற்றிய இந்தச் சக்கரங்களின் மறுமலர்ச்சிக்கு எம்.எஸ். அம்மா காரணமாக இருந்ததும், பன்னிரண்டு சக்கரங்களையும் டேப்பில் பதிவுசெய்து காஞ்சி மகாபெரியவாளிடம் எடுத்துச் சென்றபோது, அவர் கேட்டுவிட்டு, ''சூரிய சந்திரர்கள் உள்ள அளவும் நிலைத்திருக்கும்'' என்று அனுக்கிரஹித்ததும் என் நினைவுக்கு வந்தன.

கர்நாடக இசை பற்றி அதிகம் அறிந்திராத நேயர்களுக்கு இந்தச் சக்கரங்கள் பற்றிய அடிப்படையான சில விஷயங்களை மட்டும் சொல்கிறேன். நமது சங்கீதத்தில் மேள கர்த்தா ராகங்கள் என்பதாக 72 ராகங்கள் உண்டு. இவை ஒவ்வொன்றும் சம்பூர்ண ராகங்கள். அதாவது ஏழு சுவரங்களையும் உள்ளடக்கியவை. இவை தவிர உள்ள ஏராளமான ராகங்கள் இந்த 72 ராகங்களிலிருந்து கிளைத்த ஜன்ய ராகங்களே. 72 மேள ராகங்களையும் பன்னிரண்டு சக்கரங்களாகப் பிரித்து, ஒவ்வொரு சக்கரத்திலும் ஆறு ராகங்களை சாகித்யம், ஸ்வரங்களுடன் அமைத்தார் மகா வைத்தியநாதசிவன் என்ற இசை மேதை. இந்த ராகமாலிகை சாகித்தியம் திருவையாற்றில் உறையும் ''பிரணாதார்த்திஹரன்'' என்று பெயருடைய சிவபெருமானைத் துதிப்பதாக அமைந்ததுடன், ஒவ்வொரு ராகத்தின் பெயரும் சாகித்தியத்தில் இயல்பாக இடம் பெறுவதாக உள்ளது! கர்நாடக இசையின் இலக்கியமும் இலக்கணமும் பின்னிப் பிணைந்ததாக உள்ள இந்த மேள ராகமாலிகா சக்கரத்தில் ஒரு ராகத்திலிருந்து இன்னொரு ராகத்துக்கு ஸ்வரம் பாடும் போதே வெகு நளினமாக நழுவிச் செல்வதென்பது அபார சாதகத்துடன் இணைந்த சாதனையாகும்.

**"என்னதான் சொல்லு ராதா. உங்க அம்மாவோட (எம்.எஸ்) ஒரு அந்தர காந்தாரக் கார்வைக்கு நான் பாடும் சுவரம் ஈடாகுமா?" என்றார் செம்மங்குடி!**



''மேளராகமாலிகா சக்கரங்களை அம்மா யாரிடம் சாதகம் பண்ணினா?'' என்று விஜயாவிடம் கேட்டேன்.

''செம்மங்குடி மாமாவிடம்தான் கற்றுக் கொண்டாள். முதன்முதலாக இரண்டு சக்கரங்களை மியூஸிக் அகாடமியில் பாடினா. ஒரு புதிய அனுபவத்தில் ரசிகர்கள் நிமிர்ந்து உட்கார்ந்து கேட்டார்கள்.

அது முடிந்ததும் அவர்கள் கொடுத்த 'அப்ளாஸ்' அளித்த உற்சாகத்தில் அம்மா, அடுத்தடுத்த ஆண்டுகளில் அடுத்தடுத்த சக்கரங்களை அகாடமியில் பாடி நிறைவு செய்தாள். கேஸட்டும் வெளிவந்தது.''

அந்த கேஸட்டின் மேலுறையில் எம்.எஸ். அவர்களின் படம் மட்டுமின்றி மகா வைத்தியநாதசிவன் படமும் இடம்பெற வேண்டும்; அது அந்த மேதைக்கு அஞ்சலி செலுத்தியதாகும். என்று தீர்மானித்தார் சதாசிவம். ஓவியர் வினுவை அழைத்து, எங்கிருந்தோ தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வரப்பட்ட ஒரு பழங்காலப் படத்தை ஆதாரமாக வைத்து, அந்த மகானின் ஓவியத்தைப் புதிதாகத் தீட்டச் சொன்னார். அத்துடன் சிவபெருமான் திருஉருவத்தையும் பாங்காக இணைத்தார் ஓவியர் வினு. இந்த ஒலிநாடாவின் விற்பனை ராயல்டி முழுவதும், இசைத் தொண்டாற்றி வரும் மியூஸிக் அகாடமிக்கே சேர வேண்டும் என்று தீர்மானித்து அதற்கான ஏற்பாடுகளையும் செய்தார் சதாசிவம்.

''அம்மாவுடைய ஒவ்வொரு இசைப் பணியிலும் அப்பாவுடைய முத்திரை பதிந்துதான் இருக்கிறது'' என்றேன்.

''சந்தேகமென்ன,'' என்றாள் விஜயா. ''சுருதியும் லயமும் போலத்தான். அம்மாவுடைய ஒவ்வொரு கச்சேரியையும் அவளுடன் கலந்தாலோசித்து அப்பா திட்டமிடுவார். பல சமயங்களில் நிகழ்ச்சி நிரலை எழுதியே கொடுத்துவிடுவார்.''

''இதில் அபிப்பிராய பேதம் இருந்ததுண்டோ?''

''கலந்தாலோசனை என்றாலே சில கருத்து மாறுபாடுகள் இருக்கத்தான் செய்யும். ஹரிகாம்போதியை நிகழ்ச்சியில் சேர்த்தால் சங்கராபரணம் கூடாது என்பாள் அம்மா. 'வராளி எழுதிட்டு, தோடியும் எழுதறேளே' என்பாள். சில சமயம் அப் பாவும் சில சமயம் அம்மாவும் விட்டுக் கொடுப்பார்கள். அப்பாவுக்கு 'சபாபதிக்கு வேறு தெய்வம் சமானமாகுமா?' என்ற பாட்டு ரொம்பப் பிடிக்கும். அதை லிஸ்ட்டில் போடுவார். அம்மாவோ, 'போன கச்சேரியில்தானே பாடினேன்...' என்று தயங்குவாள். 'அதனால் என்ன? எனக்காக



# செம்மங்குடி கொடுத்த 'சர்டிஃபிகேட்!'

6

மறுபடியும் பாடேன்' என்பார் அப்பா. 'எனக்காகப் பாடு' என்ற இரண்டு வார்த்தைகள் ஒரு மந்திரசக்தி போல வேலை செய்யும். அன்றைய கச்சேரியில் ஆபோகி ஆலாபனையும் கீர்த்தனையும் ரசிகர்களை எங்கேயோ கொண்டு போய் இசை வெள்ளத்தில் மூழ்கடித்துவிடும்!''

**"அம்மா(எம்.எஸ்)வுடைய ஒவ்வொரு கச்சேரியையும் அப்பா (சதாசிவம்) திட்டமிடுவார். பல சமயங்களில் நிகழ்ச்சி நிரலையே எழுதிக் கொடுத்து விடுவார்!"**



''அந்நியோன்னியம் இருக்கட்டும்; அப்பாவுடைய கோபமும் ஜகத் பிரசித்தியாயிற்றே?'' என்று விஜயாவை நான் தூண்ட, ''நீங்கதான் தார்மிகக் கோபம்னு அதை வர்ணிச்சிருக்கேளே'' என்று அவள் பதிலடி கொடுத்தாள். பிறகு, ''ஒரு நாள் கச்சேரி முடிந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தோமா... அப்பாவுடைய கோபம் காரிலேயே ஆரம்பமாகிவிட்டது'' என்று பழைய சம்பவம் ஒன்றை நினைவு கூர்ந்தாள். '' 'அதென்னமா நீ சங்கராபரணத்துல மேல் ஸ்தாயியில் காந்தாரத்துக்குப் போயிட்டு பஞ்சமத்தைப் பிடிக்காம விட்டே' என்று கண்டனக் குரல் எழுப்பினார். 'என்னமோ தெரியலை; இன்னிக்கு ரொம்பக் களைப்பா இருந்தது' என்றாள் அம்மா. அப்பா இந்த சமாதானத்தை ஒப்புக் கொள்ளவில்லை. 'எப்படியும் என்றைக்காவது போக வேண்டிய உயிர்தானே; அது மேடையிலேயே போகட்டுமே' என்றார். எங்களுக்கு 'திக்'கென்று இருந்தது. அப்பா தொடர்ந்து, 'உன்னோட சங்கராபரணம் கேட்கணும்கிறதுக்காகவே எத்தனை பேர், எத்தனை செலவழிச்சுண்டு, எத்தனை ஆவலா வந்திருந்தா, அவாளுக்கு ஏமாற்றம் அளிக்கலாமோ?' என்றார். 'அடுத்த தடவை நன்னா பாடிடறேன்' என்றாள் அம்மா. அந்தக் கணமே அப்பாவின் கோபம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. வீட்டுக்கு வந்து சேரும் வரை எல்லோரும் காரில் கலகலப்பாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தோம்.''

''ரசிகர்களுக்கு அந்த அளவுக்கு மதிப்பும் மரியாதையும் தரணும்னு புரியறது'' என்றேன்.

''ரசிகர்கள்னா, டிக்கெட் வாங்கிண்டு சபா கச்சேரி கேட்க வரவா மட்டுமில்லே...'' என்ற விஜயா, மீண்டும் கடந்த கால நினைவில் பேசினாள்...

**எம்.**எஸ். அவர்கள் 'காளிதாஸ் சன்மான்' விருது வாங்க போபால் போயிருந்தபோது, மாநில அரசின் விருந்தினர் மாளிகையில் எல்லோரும் தங்கியிருந்தனர். அந்நிகழ்ச்சி மாலையில் நடைபெறவிருந்தது. அன்று காலை ஏதோ காரியமாக வெளியே புறப்பட்டுப் போனபோது

'கேட்' அருகே ஒரு வயதானவர், பழக் கூடையுடன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார் சதாசிவம். போன காரியம் முடிந்து திரும்பி வந்த போதும் அந்தப் பழ வியாபாரி அங்கேயே இருப்பதைக் கண்டார். உடனே காரை நிறுத்தச்சொல்லி, ''என்னப்பா வேண்டும்?'' என்று கேட்டார்.

''இங்கே எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி அம்மா வந்து தங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர்களை 'மீரா' திரைப்படத்தில் பார்த்து, இசையைக் கேட்டு மனம் உருகியிருக்கேன். அவர்களைத் தரிசனம் பண்ணிட்டுப் போகணும்னு ஆசை. ஆனா உள்ளே போக அனுமதிக்க மாட்டேனென்கிறார்கள்'' என்றான் அந்தப் பழ வியாபாரி.

சதாசிவம் உடனே ஸெக்யூரிடியில் சொல்லி, அவனை அழைத்துக்கொண்டு வந்து விருந்தினர் மாளிகை வராந்தாவில் நாற்காலியில் அமர வைத்தார். ''குஞ்சம்மா! 'யாது ஆவே' பாடேன்'' என்று எம்.எஸ். அவர்களிடம் கேட்டுக் கொண்டார். ''பிருந்தாவன கி மங்கள லீலா யாது ஆவே, யாது ஆவே'' என்ற ஹிந்தி மீரா திரைப்படப் பாடல் ஒலித்தது. பாட்டு முடிந்ததும் அந்தப் பழ வியாபாரி, கையெடுத்துக் கும்பிட்டான். இரண்டு பழங்களை சதாசிவம் - எம்.எஸ். தம்பதிக்குக் காணிக்கையாகக் கொடுத்து விட்டுப் போனான்...

''இப்படி எளியோருக்காக அம்மா பாடிய நிகழ்ச்சிகள் பற்றி கதைகதையாக எவ்வளவோ சொல்லலாம்'' என்றாள் விஜயா.

''காளிதாஸ் சன்மானை விட அந்த பழக்காரனின் 'சன்மான்' ஒரு மாற்று உசத்திதான்'' என்றேன்.

''அம்மாவுக்கு எத்தனையோ பட்டங்களும் விருதுகளும் வந்து குவிந்தன. ஆனால் எனக்கென்னவோ எல்லாவற்றையும்விட செம்மங்குடி மாமா கொடுத்த 'சர்டிஃபிகேட்'தான் உசத்தியா படறது'' என்றாள் விஜயா.

''நியாயம்தான். அவர் சங்கீத பிதாமகர் ஆச்சே!'' என்றேன். ''என்ன சொன்னார், செம்மங்குடி?''

''ஒரு நாள் அவர் நம்மாத்துல ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடியபடியே சுவரப் பிரஸ்தாரத்தில் இறங்கிவிட்டார். ஆடிப்பெருக்கு மாதிரி கம்பீரமாகவும் முடிவில்லாமலும் சுவரக் கோர்வைகள் வெள்ளமாகப் பாய்ந்து கொண்டிருந்தன. ராதாவும் நானும் பிரமிப்புடன் கேட்டுக் கொண்டிருந்தோம்.

ஒரு கட்டத்தில் அதற்கு மேல் தாங்கிக் கொள்ள முடியாமல் ராதா, 'எப்படி மாமா உங்களால இந்த மாதிரி பிரவாகமா சுவரம் பாட முடியறது?' என்று கேட்டாள்.


* ஓவியர் வினு


* மகர வைத்தியநாதசிவன்

பாடுவதை நிறுத்திய செம்மங்குடி மாமா, ஒரு கணம் கூட தாமதிக்காமல், 'என்னதான் சொல்லு ராதா, உங்க அம்மாவுடைய ஒரு அந்தர காந்தாரக் கார்வைக்கு ஈடாகுமா?' என்று கேட்டார்.''

அந்த நினைவில் ஆழ்ந்துபோன விஜயா, கண்கலங்கி விட்டாள். அவளைச் சமாதானப்படுத்த எனக்குக் கொஞ்ச நேரம் ஆயிற்று.

**(அடுத்த வாரம்:
திருட்டும் கொள்ளையும்!)**




# ஹீரோவாகிறாரா லாலு?

**கா**ங்கிரஸ் கட்சி இந்தத் தேர்தலுக்குப் பயன்படுத்திய விளம்பர வீடியோவில் முதலில் மன்மோகன் சிங், அடுத்து சோனியா காந்தி என்று இடம் பெறும்படி இருந்ததாம். ஆனால், சோனியாவைத்தான் முதலில் காட்ட வேண்டும் என்று சொல்லி மாற்றி விட்டார்களாம். காரணம்: சாதாரண மக்கள் மத்தியில் சோனியாதான் எடுபடுவார் என்பது கதர்களின் வாதம். ***(ஆட்சி மக்கள் கொடுத்தது; பிரதமர் பதவி சோனியா கொடுத்ததுன்னும் சொல்லலாமே!)***

**2009** பொதுத் தேர்தலுக்கான மொத்தச் செலவு 1200 கோடி ரூபாய். கணக்குப் பார்த்தால் ஒரு வாக்காளர் தலைக்கு 16 ரூபாய் 80 பைசா வருகிறது என்கிறது தேர்தல் கமிஷன். ***(ஐயா! உங்களுக்குச் செலவு! ஆனா எங்களுக்கு வரவு தானுங்களே?)***

**'இ**தென்ன புது கலாட்டா?' என்று டெல்லிவாசிகளுக்கு இன்ப அதிர்ச்சி! அசப்பில் லாலு போன்ற ஒருவர் படத்துடன் தெருவெங்கும் 'சம்மன் கட்சி' என்று போஸ்டர்கள் பளிச்சிட்டன. சாதாரண மக்கள் 'லாலுஜி டெல்லியிலும் போட்டி இடுகிறாரா?' என்று கேட்டார்கள். அப்புறம்தான் தெரிந்தது அவை ஒரு இந்திப் பட போஸ்டர்களென்றும், ஹீரோவுக்கு லாலு கெட் அப் என்றும்! ***(மறுபடி ரயில்வே மந்திரியானா, டிரைவர் இல்லாமலே சூப்பர் ஃபாஸ்ட் ரயில் விடுவீங்களோ?)***




**ஒ**ரே விஷயங்களை 'எங்களுடைய சாதனை!'' என்று எதிரெதிராகக் களமிறங்கிய இரு கட்சிகள் பெருமை

யாகச் சொல்லும் விசித்திரம், இந்தத் தேர்தலில் ஒரிசாவில் அரங்கேறியது. தேர்தலுக்குக் கொஞ்சம் முன்னால் கூட்டணி முறிந்துவிட, பா.ஜ.க.வும், பிஜு ஜனதா தளமும் இப்படி சாதனை முழக்கம் செய்தன. ***(யார் குரல் வாக்காளர் காதில் விழுந்தது என்பது தேர்தல் முடிவு வந்தால் தெரிஞ்சிடும்!)***

**கொ**ல்கத்தா வடக்கு தொகுதி மார்க்சிஸ்ட் வேட்பாளர் முகம்மது சலிம், பிரசாரத்தின்போது ஹனுமான் கோயிலுக்குப் போனது, தீர்த்தம் வாங்கி அருந்தியது எல்லாம் செம்படை வட்டாரத்தில் சலசலப்பை ஏற்படுத்திவிட்டன. ஆனாலும், சலிம், முதல்வர் புத்ததேவுக்கு நெருக்கமானவர் என்பதால் விஷயம் பெரிதாகவில்லை. ***(இங்க பகுத்தறிவு வாரிசுக எல்லாம் கோயிலிலிருந்துதான் பிரசாரத்தையே*** துவக்குவாங்க தெரியாதா?)



★ ...முன்னேறுவாரா?

**நா**டெங்குமுள்ள தேசிய ஃபேஷன் டிஸைனிங் இன்ஸ்டிடியூட்டுகளில் இளைய தலைமுறையைக் கவரும் ஸ்டைலான அரசியல்வாதிகள் பற்றி ஒரு சர்வே நடத்தப்பட்டது. ஆண்களில் முதலிடம் ராகுல் காந்திக்கு. அடுத்தடுத்த இடங்கள் ஜோதிர் ஆதித்ய சிந்தியா, சச்சின் பைலெட், ஃபரூக் அப்துல்லா. பெண்களில் முதலிடம் : ஹேமமாலினி. லிஸ்டில் மற்றவர்கள் : சோனியா காந்தி, ஜெயப்பிரதா, வசுந்தரா ராஜே சிந்தியா. **(ஜனங்களைப் பத்தி உண்மையாகவே கவலைப்படற தல யாருன்னு ஒரு சர்வே எடுங்கப்பா!)**

**- பரத்ராம்**



**இ**தய அறுவைச் சிகிச்சையின்போது இரத்தத்தின் மூலம் எய்ட்ஸ் பாதிப்புக்குள்ளாகி மரணத் தறுவாயில் இருந்தார் விம்பிள்டன் வீரர் ஆர்தர் ஆஷ்.

"இந்த வியாதிக்கு, கடவுள் ஏன் உங்களைத் தேர்ந்தெடுத்தார்?"

ஆர்தர் ஆஷ் பதில் இது: "இந்த உலகத்தில் 50 மில்லியன் குழந்தைகள் டென்னிஸ் விளையாட ஆரம்பிக்கிறார்கள். 50 லட்சம் குழந்தைகள் டென்னிஸ் ஆடக் கற்று, 5 லட்சம் பேர் முறையாகப் பயிற்சி பெறுகிறார்கள். 50,000 பேர் ஆட்ட நுணுக்கம் தெரிந்து கொள்கிறார்கள். 50 பேர் விம்பிள்டனுக்குத் தகுதி பெறுகிறார்கள். அரை இறுதிக்கு 4 பேர், இறுதியில் 2 பேர். அந்த இருவரில் ஒருவராக, கையில் கோப்பை ஏந்தி பெருமையுடன் நின்றபோது, நான் ஒருபோதும் கேட்டதில்லை கடவுளிடம், 'ஏன் என்னைத் தேர்ந்தெடுத்தீர்கள்?' என்று. வலியும் வேதனையும் வாட்டுகிற இந்தக் கணத்தில் கடவுளிடம், 'ஏன் என்னை மட்டும் தேர்ந்தெடுத்தீர்கள்?' என்று கேட்பது எந்த விதத்தில் நியாயம்?"

**- ஜி. லட்சுமிபதி, சென்னை.**

17

# காற்று வரும் பருவம்

''சாமீ...''

''யாரது?'' அம்மா கொல்லைக் கதவைத் திறந்தது. சாமியப்பன்! ஒரு அழுக்குப் பையைக் கக்கத்தில் இடுக்கியிருந்தார்.

''சாமீ சவரஞ் செஞ்சுக்கிறாரா?''

''சாமியப்பன் வந்திருக்கான். என்ன சொல்லட்டும்?''

''எங்க போகப் போவுது? அப்புறம் பார்க்கலாம்.''

''மொகத்த வளிச்சுக்குங்க. பாக்குறவ களுக்குப் பதில் சொல்ல முடியலெ...''

''த வர்றேன்'' என்று எழுந்தார். எழுந்தவர் ஒருகணம் இங்குமங்கும் அலைந்தார். கொல்லைப்பக்கம் வந்தார்.

''சாமீ வர்றீகளா?''

''த வர்றேன்.''

''பொறவாக்குலெ போயிடலாமா?''

''ம்.''

''கொஞ்சம் தண்ணி கொண்டாரச் சொல்லுங்க. நான் போய் எடத்தைச் சுத்தம் பண்றேன்.''

ஒரு காய்ந்த வாழை மட்டையை எடுத்து, தரையைச் சுத்தம் செய்தார். முருங்கை பூத்துப் பூத்துப் பூவாய் கொட்டிக் கொண்டிருந்தது. முருங்கை மீது கட்டெறும்புகள் கோடு போட்டாற்போல் வரிசை! ஐயா உக்கார மட்டும் ஒரு பழைய சாக்கு! சாமியப்பன் ஒரு வாழை மட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டார்.

''கோவிந்து... இந்த தண்ணியக் கொண்டு, சாமியப்பன் கிண்ணத்துலெ ஊத்தியா...'' என்றது அம்மா. கோவிந்து சலிப்புடன் தண்ணீர்ச் செம்பை வாங்கினான்.

''வாங்க சின்னவரே. அந்தாக்கலெ நீங்களும் ஒக்காந்துக்குறீகளா?''

''வேண்டாம்.''

''முகச்சவரம்?''

''ம்ஹூம்.''

''நம்மகிட்ட எல்லாம் எளவட்டங்கள் ஒக்காருவாகளா? அம்புட்டுத்தேன். ஐயா அவுக காரியத்தோட நம்ம ஜோலி முடிஞ்சிடும்...''

''ஒம் புள்ளக தல எடுத்திருச்சிலெ...''

''அதான் சொல்றேன் சாமீ.''

கோவிந்து, தண்ணீரைக் கிண்ணத்தில் ஊற்றிவிட்டு மர நிழலுக்குப் போய்விட்டான். அந்தத் தண்ணீரை அள்ளி அள்ளி ஐயாவின் கன்னத்தில் தடவினார். இருபது இருபத்து ஐந்து நாள் தாடி! மாசத்துக்கு இரண்டு மூன்று தடவை சாமியப்பன் வீடு தேடி வந்து விடுவார். இடையில் ஐயா, தெற்கே வடக்கே போகிறார் என்றால் ஆள் அனுப்புவார். சாமியப்பன் முன் உட்கார்ந்து விட்டால் போதும். ஊரைச் சுற்றி வந்தாப்புலெ ஆயிடும். கை தொழிலில் இருக்கும். வாய் ஓயாமல் ஒப்பிக்கும். இடையில் ஒரு தடவை அல்லது இரண்டு தடவை மூக்குப் பொடி டப்பியைப் பிரிக்கும். சிறிது கிள்ளி எடுத்துக் கடைவாய்ப் பல்லில் இழுத்துக்கொள்ளும். அதற்குப் பிற்பாடுதான் வாய் மலர்ந்துவிடும்!

''என்னாச்சு தெரியுமாங்கையா கத?''

''எந்தக் கத?''

''வடக்குத் தெரு ஆளுகளை இனி கிட்டக்கச் சேர்க்கப்படாதுண்டு பேச்சு! நம்ம செட்டியார் ஐயாவை அண்டி ஒரு குடும்பம் குடிசை போட்டு ஒக்காந்திருந்துச்சு. நம்ம குடியானவுக தொந்தரவு தாங்கமாட்டாம அதுகளெ முடுக்கி விட்

டுட்டார். இப்ப கத என்னாச்சு தெரியுமா? அந்த மம்பட்டியான் காடு, கரைகன்லெ வெறகு வெட்டி வித்துகிட்டுக் கெடக் கான். பொண்டாட்டி, புள்ளக கோட்ட யூருக்குப் போயிருக்குக. அவ பொறந்த ஊரு அதானே? அவ தம்பிக்காரன் கெட்ட ஜாதிப் பய போல. அதனால அவ மககாரி அங்குனக்குள்ள இருக்க மாட்டாமுண்டுட் டாளாம். பொறவு செட்டியாரய்யாவ வந்து பாத்திருக்கு. அவரு நான் கிட்ட சேக்க முடியாது. ஊர் நிலமை மோச முண்டு சொல்லிப்பிட்டாராம்.''

''காரியத்தைக் கவனிச்சுப் பாரப்பா. ஓம்பாட்டுக்கு கை எங்கெங்கோ போகுது...''

''ஒங்க பாட்டுக்கு சூசுவாண்டு இருங்க. கண்ணெக் கட்டிக்கிட்டாக்கூட, என் கைத்தடம் மாறியிடாது.''

உண்மைதான்! சாமியப் பனுக்கு எழுபது இருக்கும். பத்துப் பன்னிரெண்டு வய தில் கத்தியைத் தூக்கி யிருப்பார். எத்தனை முகத்தைத் தொட்டிருப் பார்? எத்தனை தலை களில் கை பட்டிருக் கும்? ''இன்னம் கொஞ்சம் தண்ணீ'' என்று கிண்ணத்தை நீட்டினார்.

''அப்புறம் என்னாச்சுனாங்கய்யா...?''

''மேவாக்குலெ கத்தி போடதீப்பா. கட்ட பாஞ்சிடும்.''

''நாம் பாத்துக்கிறேன் சாமீ. சித்த கேளுங்க. அந்தக் கதையைச் சொல்லி முடிச்சுடுறேன்.''



"இத்தனை நாள் பட்ட வேதனை போதும். நெனச்சு நெனச்சு நெஞ்சு பழுதாப் போச்சு!"

''ம்.''

''கடைசியா செட்டியாருக்கு ஒரு யோசனை! அதுகளை நட்டாத்தமா வுட்டுட அவருக்கு மனசு இல்லெ. அவரு சித்தப்பா மக்க, பெரியப்பா மக்க, எல்லாம் குச்சனூர்லெ இருக்குதுகளாம். ஆட்டுக் கெடை போட்டிருக்காம். ஆத்துக்கு மேக்கால. கெடைக்கு காவலுக்கு ஆத்தாளையும், மவளையும் அனுப்பிச் சுட்டாராம். அதுக அங்குனக்குள்ளே பொங்கித் தின்னுட்டு கெடக்குதுகளாம்.''

''ம்.''

''இத எதுக்குச் சொல்றன்னா நாம என்னதான் சட்டதிட்டம் போட்டாப்புலெ இந்தக் கழுதப் பய மனசு கேக்குதுகளா?''

''ம். மம்பட்டியான்?''

''அவன் வெறகு வெட்டிப் பொளக்குறான்.''

''அதுக பண்ணுன தல பொறட்டு தானே!''

''நம்ம பயல்க மேலேயும் குத்தம் தான்.''

கோவிந்துக்கு வெதுவெதுவென்று நெஞ்சில் சூடு பரவிற்று. இத்தனை நாள் தேடித் தவித்த மனசுக்கு விடை கிடைத்துவிட்டது. ஒரே ஒரு ஆறு தான் குறுக்கே. இத்தனை நாளும் அங்குதான் குளிப்பது, துவைப்பது, மாலையில் ஆற்று மணலில் படுத்துக் கிடப்பது. எல்லாம் அந்த ஆற்றில்தான். பஞ்சு கூப்பிடும் தூரத்தில்தான் இருந்திருக்கிறாள். இது தெரியாமலே தவித்துக் கொண்டிருந்திருக்கிறோம். ஆற்றைக் கடந்தால் குச்சனூர். ஆற்றைத் தாண்டுவது கூட சிரமம் இல்லை.

''பஞ்சு...''

''எதுக்கு இத்தனை தூரம்?''

''என்ன கேள்வி?''

''போதும், ஒண்ணு விழுந்தது போதும்!''

''பஞ்சு...''

''இத்தனை நாள் பட்ட வேதனை போதும். நெனச்சு நெனச்சு நெஞ்சு பழுதாப் போச்சு..''

''பஞ்சு...''

''மனசுலெ ஒண்ணும் இல்லாம காலி பண்ணியாச்சு.''

''காலி பண்ணீட்டியாக்கும்?''

''ம். எவனோ வந்து காலி பண்ணிட்டுப் போறதுக்கு, நானே காலி பண்ணியாச்சு. ஒரு உசுராவது மிஞ்சட்டும்...''

அவள் முகத்தை மூடிக் கொண்டாள். கசிந்து கசிந்து கண்ணீர் இறங்கிக் கொண்டிருந்தது. கோவிந்து தவிச்ச வாய்க்குத் தண்ணீர் தண்ணீர் என்று அரட்டுவதுபோல், பஞ்சு பஞ்சு என்றானே தவிர வேறு ஒன்றும் சொல்லத் தோன்றாமல், கேட்கத் தோன்றாமல் திகைப்பும், தவிப்புமாக நின்றிருந்தான்.

''குத்துயிரும் கொலையுயிருமாப் போறதுக்கா...'' என்று மூக்கு நுனி சிவக்க, கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

''ஓம்பாட்டுக்குப் பேசாத பஞ்சு!''

## தவம்

உன்னிடமிருந்து மலராத
ஒற்றை வார்த்தைப் பூவுக்காக
ஊற்றிக் களைக்கிறேன்
என் மன நீரை
பூக்கத்தான் போகிறாய்
எனக்காக
எல்லாப் பூக்களையும்





''ஏன் திடீர்னு உங்க உடம்பெல்லாம் நடுங்குது...?''

''இப்போ வந்துட்டுப் போன நர்ஸ் என் மனைவி சாயல்ல இருந்தாங்க டாக்டர்...''

- ஆர்.என். கண்ணன்

''இத்தனை நாளா ஏம்பாட்டுக்குத் தானே பேசிக்கிட்டுக் கெடந்துச்சு; ராக்காச்சி கெணக்கா.''

''ஏன்?''

''ஓங்களுக்கு ஒண்ணும் ஆயிடப் படாது. அதுக்கு நான்தான் கண்ண மூடிக் கிடணும்.''

''சரி. மூடிக்க...''

''அதானே முடியலெ.''

''அப்ப திற...''

''அதுவும் முடியலெ.''

அவன் எங்கோ திரும்பிக் கொண்டான்.

''பேராசப்பட்டா ஆச்சா? என்னாலெ அந்த நஷ்டத்தைத் தாங்க முடியாது.''

''பார்றா...''

''அதான் ஒரு உசுரு போச்சே...''

இரக்கத்துடன் அவனைப் பார்த்தாள்.

''எங்கோ இருக்குற கோபத்தை ஒரு அப்புராணி மேலெ காமிச்சாச்சு. என் மொகத்துலெ கூட முழிக்க மாட்டீங்கனு நெனச்சேன்.''

''நீ என்ன பண்ணினே?''

''பண்ணுனவங்களயா பார்த்துப் பழி போடுதுக.''

''ப்சு. வுடு.''

''இத்தனை மோசமா நடந்த பொறவும் என்னைப் பத்தி நெனைக்கத் தோணுச்சா?'' அவள் முகம் கோணி விட்டது. குரல் உடைந்து கண்ணீர் பெருகிவிட்டது.

கோவிந்து மரத்துக்கு அருகில் போனான். மரத்தில் கை வைத்தான். அவள் கை இடறிற்று. சட்டென்று இறுக்கிப் பிடித்தான். அவளை நெருங்கித் தொட்டு இழுத்தான். அவள் பதற்றத்தோடு சுற்றுமுற்றும் பார்த்தாள். தூரத்தில் யாரோ புல்லுக்கட்டு கட்டிக் கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். மிக நெருக்கமாக அவளை இழுத்து வைத்துக் கொண்டான். அவள் உடல் தணலாக இருந்தது.

''மறந்துட்டியா பஞ்சு?''

''என்னத்த?''

''சத்தியம் பண்ணியது!''

''என்னது?'' அவள் விழி ஏறி, திகிலாய் நின்றது.

''தெரியலெ?''

''ஏதோ ஆசை. குருட்டு ஆசை. இப்ப ஊர் ஊராவா இருக்கு. இது இங்க வந்து நிக்கும்படியா ஆச்சு!''

''இங்கயும் சேந்துதானே நிக்குறோம்.''

''உங்களைப் பிடுங்கிட்டுப் போயிடுவாங்களு பயம்.''

''வீணா பயப்படாதே. துணிஞ்சு ஒரு

## ரீடர்ஸ் ஜோக்ஸ்

"சேலத்திலுள்ள நண்பர் வீட்டில் அண்ணா உணவருந்தச் சென்றிருந்தார். இலை போட்டவுடன் முதலில் அப்பளமும், முட்டையும் வைத்தனர். சிறிது காற்றடிக்கவே, அப்பளம் இலையிலிருந்து பறந்துவிட்டது. இதைப் பார்த்ததும், "முட்டையின் விலை என்ன?" என்றாராம் அண்ணா. "நாலணா" என்றார் நண்பர். "அப்பளத்தின் விலை?" "காலணா" என்றாராம் நண்பர். உடனே, அண்ணா, "பார்த்தீர்களா? காலணா தலைவிரித்தாடுகிறது. நாலணா அமைதியோடு இருக்கிறது" என்று சொன்னாராம். சாப்பாட்டு மேஜை கலகலப்பானது.

- மா. உலகநாதன், கும்பகோணம்.



முடிவு பண்ணணும்."

"அதான் ஆபத்து!"

"ஆபத்தா?"

"ம். ஊர் நெலமை?"

"அது என்னிக்கு நல்லா இருந்துச்சு?"

பொழுது நன்றாகக் கருத்துவிட்டது.

"தலைக்கு மேலே தொங்குறது தெரியாம இருக்கோம்."

"பஞ்சு... பஞ்சு... சும்மா இரு" என்று அவன் தோளைத் தொட்டு நேராகத் திருப்பினான்.

"என்னது இது... உனக்கு என்னவோ ஆச்சு..."

"இல்லை" என்று தலையை மட்டும் அசைத்துவிட்டு முகத்தை மூடிக் கொண்டாள்.

"என்ன பஞ்சு இது..?" அவன் பரபரப்படைந்து விட்டான்.

"உங்க குடும்பத்துலெ களெ மாதிரி விழுந்துட்டேன். எனக்கு அதுக்கெல்லாம் லாயக்கா இருக்கு? எத்தனை பேரை நோக அடிக்கப் போறதோ? இப்பவே உங்க ஊட்டுலெ நெஞ்சு புண்ணாகிக் கெடக்கு..." அவளால் முழுசும் பேச முடியவில்லை. விக்கினாள். கோவிந்துக்கு அவளைப் புரியும்.

"நீங்கதான் என்னைக் காப்பாத்தணும்."

"என்னது?"

"தினம் தினம் குமச்சல்; அப்படியே வதங்கிக்கிட்டு கெடக்குறேன்..."

"நான் என்ன செய்யணுங்குறே..?"

"தெரியாது..."

பஞ்சு பேசாமல் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சற்றுக் கழித்து, "பொழுது இறங்கிடுச்சு" என்று முகத்தைப் பார்த்தாள். கண் கொட்டாமல் அவன் முகத்தையே பருகிக் கொண்டிருந்தாள். அந்தத் தித்திப்பிலும் திகைப்பிலும் அப்படியே நின்று விட்டாள். சில நிமிடம் அப்படி ஓடிற்று. 'ம்' என்று ஒரு இழுப்போடு நகர்ந்தாள். அவன் ஒரு கணம் குழம்பித் திகைத்துப் போனான். அவன் நகர்ப்பு மந்தப்பட்டது. வியப்போடு அவனைப் பார்த்தாள். 'அப்புறம்?' இதை வாய் கேட்கவில்லை. தன்னைப் போலவே பஞ்சும் அளவுக்கு மீறி வதைபடுகிறாள். மரத்து மறைப்பில் இருந்து அவன் விலகுமுன், அவன் மார்பில் வந்து விழுந்து, புதைந்துவிட்டாள். கண்ணும் உதடும் அவன் நெஞ்சில் ஈரமேற்படுத்திற்று. ஆடுகள் சிதறி ஓட சட்டென்று விலகினாள்.

**(காற்று வீசும்)**

குரு உயிருக்குயிராய்க் காதலிக்கும் டீ.வி தொகுப்பாளினியான பிரியாவை, பாலியல் பலாத்காரம் செய்து கொலை செய்து விடுகிறார் ஈகிள் டீ.வி நிறுவனத்தின் தலைவர். அவரைக் கொல்லப் போவதாக (இரண்டு மணி நேரத்துக்குள்) கதையின் நாயகனான குரு அவரிடமே சொல்லிவிட்டு செய்யும் சாகசங்களே படத்தின் விறுவிறுப்பான திரைக்கதை.

குருவாக எஸ்.ஜே.சூர்யாவும், பிரியாவாக ஷாயாலி பகத்தும் தங்கள் பாத்திரத்தின் தன்மை உணர்ந்து நடித்திருக்கின்றனர். வழக்கமான தனது மசாலாத்தனங்களையும், இரட்டை அர்த்த வசனங்களையும் அதிகம் தவிர்த்துவிட்டு அடக்கி வாசித்திருக்கும் எஸ்.ஜே.சூர்யா, இனி அழுத்தமான பாத்திரப் படைப்புகளில் நடிப்பதற்கான நல்ல தொடக்கம் இது.

இரண்டு மணி நேரத்துக்குள் வில்லன் இறக்கப் போகிறான் என்பதை முன் கூட்டியே தெரிய வைத்துவிட்டு கதையை நகர்த்தியிருக்கும் விதம் அபாரம்! 'இது கணக்குப் பாக்குற நேரம் இல்ல... கணக்கு தீர்க்கிற நேரம்...' போன்ற ஆர்.ரவியின் வசனங்கள் படத்துக்குக் கூடுதல் பலம். படத்தின் வேகத்துக்கு ஈடு கொடுத்திருக்கும் ஒளிப்பதிவும், பின்னணி இசையும் பாஸ் மார்க் பெறுகின்றன.

இரண்டாம் பாதியின் நீளத்தைக் குறைத்திருக்கலாம். காதலியின் பிரிவு மனத்தில் நிற்கவேயில்லை. இதில் அழுத்தம் கூடியிருந்தால் படம் இன்னும் நன்றாக வந்திருக்கும். திரைக்கதை உத்தியில் கவனம் செலுத்தத் தொடங்கியிருக்கும் இயக்குநர்களின் வரிசையில் இனி தாய்முத்து செல்வனுக்கும் ஓர் இடமுண்டு. நியூட்டன் மூன்றாம் விதி - எதிர்வினை.

- ஜே.ஜே.



# நியூட்டனின் 3ஆம் விதி

பெற்றோர்கள் தங்கள் பிரச்னைகளை பிள்ளைகளின் முன்னால் வைத்துக் கொண்டால், அவர்களது வாழ்க்கை சிக்கலுக்கு உள்ளாவதோடு அவர்களது குழந்தைகளின் மனவுலகமும் சிதைவுகளுக்கு உள்ளாகும். குழந்தைகள் கொண்டுள்ள கனவுகள் நனவாக அவர்களது தாய் தந்தையரின் ஊக்குவிப்பே முக்கியமாக இருக்க வேண்டும்... அதுவே குழந்தைகள் விரும்புவதும் கூட.

'கனவு காணுங்கள்'- என்கிற அப்துல் கலாமின் மந்திரச் சொல்லோடு படம் துவங்குகிறது. பள்ளிக் குழந்தைகளின் கனவுகளின் வழியாக நமது குடும்ப வாழ்வின் நுண்ணிய பிரச்னைகளையும், இயலாமைகளையும் மிக அழகாகப் படம் பிடித்ததோடு, வாழ்வதற்கான அர்த்தத்தையும் நேர்த்தியாகச் சொல்லியிருக்கும் அறிமுக இயக்குநர் பாண்டியராஜுக்கும், தயாரித்த சசிகுமாருக்கும் மிக அழுத்தமான கைகுலுக்கல்கள்.

எங்கிருந்துப்பா புடிச்சீங்க இந்தப் பசங்களை? அடடா! தியேட்டரையே சிரிக்க... சிரிக்க வைச்சு கதிகலங்க வைச்சுட்டாங்களே... அந்தப் பய 'பக்கடா', ஜீவாவோடு சேர்ந்துக்கிட்டு பண்ற சேஷ்டைகள் இருக்கே, அப்படியே நமது கடந்துபோன பால்யத்தை கண்முன் நிறுத்துகின்றன. மிக நீண்ட நாட்களுக்குப் பிறகு நல்ல படம் பார்த்த சந்தோஷம்.

சண்டை போட்டுக் கொள்ளும் சிறுவர்களைக் கட்டுப்படுத்த தேசிய கீதம் போடுவதும், 'இதெல்லாம் சட்டசபையில் செய்ய வேண்டியது' என தலைமையாசிரியர் கடிந்து கொள்வதும் பலே ஐடியா!

'நாம சொல்றதைக் கேட்கறதுக்கும், அதைப் புரிஞ்சுக்கறதுக்கும் நல்ல மனசு வேணும் சார்...'

'சகிப்புத் தன்மையை கடைப்பிடிக்கும்போதுதான் சந்தோஷமே என்னன்னு தெரியுது..' இப்படி பல இடங்களில் வசனங்கள் நச். மீனாட்சிசுந்தரமும் (விமல்), சோபிக்கண்ணு(லேகா)வும் போட்டுக்கொள்ளும் சண்டைகளில் தியேட்டரில் சிரிப்பலை... இருவருக்கும் நல்ல தொடக்கம்.

பின்னணி இசையில் மிரட்டியிருக்கிறார் ஜேம்ஸ் வசந்தன். கண்களை உறுத்தாத, சீரிய ஒலிப்பதிவு தந்திருக்கும் ச.பிரேம்குமாரின் கண்கள் அழகோ அழகு.

தகிக்கும் அனலில், கோடையின் வெப்பத்தை விரட்ட வந்திருக்கும் பசங்க! கைதட்டி வரவேற்போம்.

- ராஜா



## • அமரர் கல்கி •

தமிழகத்து ஸ்திரீ புருஷர்களைச் சாட்டையடித் துன்பத்திலிருந்து பாதுகாப்பதற்காக, தளபதி விரூபாக்ஷன் சிவகாமியை நாற்சந்தியில் நடனமாடச் சொன்னான். அவ்விதம் செய்வது தெய்விகமான, பரத நாட்டியக் கலையையே அவமதிப்பதாகும் என்று எண்ணி முதலில் சிவகாமி, ''முடியாது!'' என்றாள்.

ஆனால், விரூபாக்ஷனின் கட்டளையின் பேரில், 'சுளீர்' என்ற சாட்டையடிச் சப்தம் கேட்டதும் சிவகாமியின் மனஉறுதி பறந்து போய் விட்டது. மறுகணம் வாதாபி நகரின் நாற்சந்தியில் சிவகாமிதேவி நடனம் ஆடத் தொடங்கினாள். அற்புதமாக ஆடினாள். துன்பத்திலே இன்பம் உண்டு என்னும் வாழ்க்கைத் தத்துவம் நன்கு விளங்கும்படி ஆனந்தமயமாக ஆடினாள். சகிக்கமுடியாத கஷ்டத்திலிருந்து எல்லையற்ற ஆனந்தம் பிறக்கும் என்னும் உண்மை நிதர்சனம் ஆகும்படி ஆடினாள். தன்னை மறந்து, வெளி உலகத்தை மறந்து, காலதேச வர்த்தமானங்களை மறந்து ஆடினாள். அந்தக் காட்சியானது அழகுத் தெய்வம் ஆனந்த வெறிகொண்டு ஆடுவது போலிருந்தது.

வாதாபியின் வீதியில் சிவகாமி நடனம் ஆடியபோது வானமும் பூமியும் அசைவற்று நிற்பது போல் தோன்றியது. வீதியிலே போய்க் கொண்டிருந்த வாதாபி நகர மாந்தர்கள் அப்படியே அப்படியே நின்று அந்த விந்தையைப் பார்த்தார்கள். பந்தமுற்ற தமிழகத்து ஸ்திரீ புருஷர்கள் அசைவற்று நின்றார்கள். கையில் சாட்டை பிடித்த கிங்கரர்களும் சும்மா நின்றார்கள். அவர்களுடைய தலைவன் விரூபாக்ஷனும் அசையாமல் நின்றான். அனைவரும் பார்த்த கண்கள் பார்த்த வண்ணம், சிற்ப வடிவங்களைப் போல் நின்றார்கள். காலம் போவதே தெரியாமல் மெய்மறந்து உலகத்தை மறந்து நின்றார்கள்.

சூரியன் மலைவாயிலில் விழுந்தது. கோட்டைக் கதவுகள் சாத்துவதற்குரிய அஸ்தமன பேரிகை முழக்கம் கேட்டது. சிவகாமியின் நடன பரவசத்துக்கு அதனால் பங்கம் ஏற்பட்டது. ஆட்டம் ஆடுவதை நிறுத்தி சிவகாமி நின்றாள். அத்தனை நேரமும் ஏதோ ஓர்

# நாற்சந்தி நடனம்!





# வண்ணத் தூரிகை

அதிசய ஆனந்த உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவள், திடீரென்று பூவுலகத்துக்கு வந்தவளாய்ச் சுற்றுமுற்றும் பார்த்தாள். தான் நின்றிருந்த இடத்தையும் இத்தனை நேரம் செய்த காரியத்தையும் நினைவுக்குக் கொண்டு வந்தாள்.

அவள் உள்ளத்தில் சகிக்கமுடியாத வெட்கத்துக்கும் துன்பத்துக்கும் மத்தியில் இன்பமும் பெருமையும் உதித்தன. கட்டுப்பட்டு நின்ற பல்லவ நாட்டு ஸ்திரீ புருஷர்களை, சிவகாமி நோக்கினாள். அவர்களுடைய கண்களிலே ததும்பிய நன்றியறிதலைக் கவனித்தாள்.

**(சிவகாமியின் சபதம் நவீனத்திலிருந்து...)**











**வா**ழ்வின் எல்லா தரிசனங்களையும், அரிய தருணங்களையும் ஆவணமாகப் பதிவுசெய்வது கடினம். அந்தக் கடின மான காரியத்தை கடவுள் கொடுத்த அபூர்வ கேமராவான கண்களின் மூலம் தனி மனித சொத்தாகத்தான் மாற்ற முடி யும். கணநேரமே வந்து போகும் அவ் விஷயத்தை பொதுமைப்படுத்தி உயிர்ப் போடு சேமித்து வைக்கும் புகைப்படக் கலைஞர்களின் பட்டியலில் சேர்ந்துள்ள வர் கிராபியென் பிளாக்.

''ஒரு புகைப்படம் உலகத்தை உலுக் கும் வல்லமை பெற்றது என்பார்கள். அப்படித்தான் இயக்குநர் மிஷ்கினின் நேர்காணலுக்காக எடுத்த ஒரே ஒரு படம் அவரிடம் உதவி இயக் குநராக என்னை மாற்றியது'' என்று சிலாகிக்கும் பிளாக், நண்பர் சு.பாரதி கண்ணன் என்கிற குரு குலத்திலிருந்து வந்ததை கர்ண பண் போடு நினைவு கூர்கிறார்.

''எழுத்து பல மனநிலைகளில் பலவாறு வாசிக்கப்படும். எனது புகைப் படம் எனது கண்களின் வழியாக ஒரே விஷயத்தைத்தான் உங்களை வாசிக்க வைக்கும்'' எனப் பெருமிதத்தோடு கண் சிமிட்டுகிறார் இந்தக் கேமரா கலைஞன்.

**- அமிர்தா**

**ச.ந.கண்ணன்**




கிரிக்கெட் ஆடுகளம் என்பது இரு தரப்புக்கும் (பேட்ஸ்மேனுக்கும் பந்து வீச்சாளருக்கும்) நியாயம் சேர்க்கும் விதமாக இருக்க வேண்டும். சென்ற முறை இந்தியாவில் நடந்த ஐ.பி.எல். போட்டிகள் அநியாயத்துக்கு பேட்ஸ்மேனுக்கு சாதகமானதாக இருந்தன. நிறைய தடவை 200 ரன்கள் அடிக்கப்பட்டன. பெங்களூருவில் நடந்த முதல் ஐ.பி.எல். ஆட்டத்தில் மெக்கலம் 13 சிக்ஸர்கள் அடித்ததை எக்காலத்திலும் மறக்கமுடியாது. சொல்லப்போனால் 20-20யின் வடிவமே ஃபோர்களாலும் சிக்ஸர்களாலும் கட்டமைக்கப்பட்டதுதான். ரசிகர்கள் மைதானத்துக்கு வருவது சிக்ஸர் வாண வேடிக்கைகளை வாயைப் பிளந்து பார்ப்பதற்கு. டீ.வி. முன்னால் அமர்பவர்களும் அதே நேர்க்கோட்டில்தான் ஆட்டத்தை அணுகுகிறார்கள். நல்ல வேளை தென் ஆப்பிரிக்க ஆடுகளங்கள் ஒரு சாராருக்கு மட்டும் சாதகமானதாக இல்லை.

அப்படியும் ஒரு மனிதருக்கு ஆடு

# வரலாற்று

களமோ எவ்விதப் பந்து வீச்சோ தடைகளாக இல்லை. சர்வதேச கிரிக்கெட்டில் இருந்து முற்றிலும் விலகி விட்ட மேத்யூ ஹேடன்தான் ஐ.பி.எல்-ன் தன்னிகரற்ற நட்சத்திரம். ஆட்டத்தை அவர் அணுகும்விதமே பார்க்க அலாதியாக இருக்கிறது. தன் திறமைக்கு அப்பாற்பட்டுதான்

மற்றவர் திறமை என்கிற மாதிரியான அவருடைய பயமற்ற போக்கு, சென்னை சூப்பர் கிங்ஸை அதலபாதாளத்திலிருந்து காப்பாற்றியிருக்கிறது.

ஆனால் பஞ்சாப்புடனான ஆட்டத்தில் ஹேடனை ஸ்ரீசாந்த் நடத்தியவிதம் கவனத்துக்குரியது. ஹேடன் சாதித்து முடித்த மனிதன். ஆஸ்திரேலிய கிரிக்கெட் வரலாற்றில் கொட்டை எழுத்தில் அவர் பெயர் எழுதப்படும். ஆனால் ஸ்ரீசாந்த், இரண்டு வருடங்களாக அணியில் ஓர் நிரந்தர இடம்பிடிக்க

**ஸ்ரீசாந்தின் நடத்தையைப் பார்க்கும்போது ஹர்பஜன் விவகாரத்துக்குப் பின்பும் அவர் மனம் மாறவில்லை என்பது நன்றாகவே தெரிகிறது.**

# நாயகன்!




வழியில்லாமல் இருப்பவர். தன் தகுதி, தன் உயரம் என்ன என்றெல்லாம் பாராமல் குறிப்பிட்ட ஓவரில் மூன்று சிக்ஸர்கள் கோட்டை விட்டுவிட்டு, கடைசிப் பந்தில் ஆட்டமிழந்த ஹேடனைப் பார்த்து அவர் கரித்துக் கொட்டியது மன்னிக்கவே முடியாத குற்றம். அணியின் நலனுக்காகவே ஹேடன் தன் விக்கெட்டைப் பறிகொடுத்தார். அந்தச் சூழலில் ஸ்ரீசாந்துக்கு விக்கெட் அருளப்பட்டுள்ளது. அவ்வளவுதான். ஸ்ரீசாந்தின் நடத்தையைப் பார்க்கும் போது ஹர்பஜன் விவகாரத்துக்குப் பின்பும் அவர் மனம் மாறவில்லை என்பது நன்றாகவே தெரிகிறது. இன்னோர் அபாயம், அபராதம், தண்டனை காத்திருக்கிறதோ என்று அச்சப்படத் தோன்றுகிறது. தொடர்ந்து சேஷ்டைகளுக்காக பேசப்படுவதும் விமர்சிக்கப்படுவதும் ஸ்ரீசாந்துக்கு வழக்கமாகி விட்டது. இந்திய கிரிக்கெட் வரலாற்றில் அவருக்கு துக்கிளியூண்டு இடம் கூட வேண்டாம் போலிருக்கிறது. ●

## மினிக்கதைகள்

### உணர்வுகள்

"நீ சாஃப்ட்வேர் கம்பெனியில வேலை பாக்கறேன்னு வெளியில சொல்லாதே. சிரிப்பாய்ங்கே!"

"மாதவா, நீ என்ன சொல்ல வர்றே?"

"இந்த மெட்ரோ சிட்டியில அதுவும் கம்ப்யூட்டர் காலத்துல போய் 'கிளி ஜோசியம்' பாக்கறியே?" முருகனுக்குப் புரிந்தது. "ஓ... நீ அதைச் சொல்றியா? ஒண்ணுமில்லடா. அந்த ஜோசியம் பாக்கற பெரியவர், நாலு நாளா அந்த மரத்தடியிலதான் இருக்காரு. அவர் மட்டும் பிச்சை எடுத்தாருன்னா கண்டிப்பா எல்லோரும் பிச்சை போடுவாங்க. ஆனா அது அவருக்குப் புடிக்கலை. இந்த வயசுலயும் அவருக்குத் தெரிந்த தொழில் மூலமா உழைச்சுச் சாப்பிடணும்கிற சுயமரியாதை - நான் பாக்குற நேரமெல்லாம் அவர் மட்டும் சும்மாதான் உட்கார்ந்திருப்பார். அவருடைய கண்கள்... 'யாராவது ஜோசியம் பார்க்க வரமாட்டாங்களா?'ன்னு தேடும்.

அந்தத் தேடும் கண்களின் மொழி பசிதானே..? காசு, பணம் கொடுத்து உதவி செய்தால், பிச்சைன்னு கண்டிப்பா வாங்க மாட்டாரு. அதுதான் அவர்கிட்ட ஜோசியம் பார்த்தேன். மனித உணர்வுகளை, வலிகளைப் புரிந்துகொள்ள முடியாத நாகரிக வளர்ச்சி பயனற்றதுன்னு எனக்குத் தோணுதுடா"

நெகிழ்ந்து போய், வார்த்தை வராது மருகிய மாதவன், தன் கையைப் பார்த்தான்.

- பா.பாண்டிச்செல்வம்



## அடித்த பணம்

நடைபாதையில் கூட்டம் அதிகம். நெரிசலில் நுழைந்தபடி இமைக்கும் நேரத்தில் பர்ஸை அடித்துவிட்டான் கேசவன். தனிமையான இடத்துக்கு வந்து பிரித்த போது இருநூறு ரூபாய் பணம் இருந்தது.

அடுத்தது அதில் ஒரு காகிதம் இருந்தது. அதைப் பிரித்துப் பார்த்தான். டாக்டரின் பெயரையும், நோயாளியின் பெயரையும் பார்த்தவன் பேயறைந்த தினுசில் அதிர்ந்தான். காரணம், அதிலிருந்தது அவனது அம்மாவின் பெயர்தான். அந்த மருத்துவரின் மருத்துவமனையில்தான் இப்பொழுதும்

சிகிச்சைக்காக இருக்கிறாள்.

மருந்து வாங்கப் பணம் தேவை என்று டாக்டர் சொல்லியிருந்தார். வழக்கம் போல் எப்படியாவது பர்ஸ் அடித்து மருந்தை வாங்கிக் கொடுத்து விடலாம் என நினைத்து, இன்று வழக்கத்துக்கு முன்னதாகவே புறப்பட்டுவிட்டான். பர்ஸும் அடித்து அதில் பணமும் இருக்கிறது. மின்னல் வேகத்தில் மருந்தை வாங்கிக் கொண்டு மருத்துவமனை சென்றபோது, டாக்டர் அவனை எதிர் கொண்டார். கூடவே அவனது மனைவியும் நின்றிருந்தாள்.



''என்னங்க கொஞ்சம் முன்னமே வந்திருக்கக்கூடாதா? இங்கே மருத்துவ மனையில் இருந்த ஒருவரிடம் பணம் கொடுத்து மருந்து வாங்கிவர அனுப்பினேன். ஒரு மணி நேரம் ஆகியும் இன்னும் வரவில்லை. சரியான நேரத்தில் மருந்து கிடைக்காததால் அத்தை நம்மை விட்டுப் போயிட்டாங்க'' என்று சொன்னபோது அவன் இதயம் சுக்குநூறாய் வெடித்துச் சிதறியது.

**- தமிழ்நாயகி**

''என்ன சாப்பிடறீங்க?'' சர்வர் கணேசன் கேட்டான்.

''மூணு தோசை கொண்டு வா!'' என்றார் மிடுக்காக வெள்ளைத்துரை.

சில நிமிடத்துக்குப் பின் சர்வர், ஒரே ஒரு தோசையைக் கொண்டு வந்து வைத்தான்.

அவனை முறைத்துவிட்டுச் சாப்பிட ஆரம்பித்தவர், ''ரெண்டு மெதுவடை கொண்டாந்து வை!'' என்றார்.

இப்போது ஒரு மெதுவடை மட்டுமே வந்தது. வெள்ளத்துரை எதுவுமே பேசவில்லை. இறுதியில், ''ஒரு ஸ்பெஷல் காப்பி!'' என்றார். ஆனால் சர்வர் கொண்டு வந்து தந்ததோ சாதா காப்பி.

தொங்கிய முகத்துடன் அதைக் குடித்தவர், எழுந்தார். கணேசன் பில் கொண்டு வந்து கொடுத்தான். ஓட்டல் கல்லாவுக்குப் போனார் வெள்ளத்துரை. பில்லை கேஷியரிடம் நீட்டி, அதன் பின்னால் 'சர்வர் கணேசன்' என்று பெயரை எழுதிக் கொள்ளச் சொன்னார்.

''சரி.. .சரி... போயிட்டு வாங்க!'' என்று உள்ளிருந்து பார்வையை விட்டான் சர்வர் கணேசன். ஏதோ தன் மகனான சர்வர் கணேசனால், அரை வயிற்றுக்காவது உணவு கிடைக்குதே என்று திருப்தியோடு வெளியே சென்றார் வெள்ளைத் துரை.

**-கு.அருணாசலம், தென்காசி**





# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** சாதனைகள் படைக்கும் வாரம். வீடு மாற்றம் உண்டு. உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். வேலைப் பளு அதிரிக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். சுபகாரியச் செலவு வந்து சேரும். உடல் ஆரோக்கியம் சீராகும். சொத்து வாங்கும் யோகம் வந்து சேரும். வழக்கு வெற்றி அளிக்கும்.

**ரிஷபம்:** தொட்டது துலங்கும். வீடு மனை வாங்க உகந்த காலம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். எதிர்ப்புகள் விலகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி உண்டு. பதவி உயர்வு கிட்டும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். குழந்தைகள் வழியில் சுபகாரியம் கூடி வரும்.

**மிதுனம்:** உல்லாசமான வாரம். பண வரவு பெருகும். ஆடை, ஆபரண, அலங்காரப் பொருட்கள் வாங்குவீர்கள். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். புண்ணிய தரிசனம் கிட்டும். உடன்பிறப்புகளால் அனுகூலம் ஏற்படும். வேலையில் உயர்வு ஏற்படும். புதிய வேலை தேடி வரும். வியாபாரத்தில் மிகுந்த லாபம் கிட்டும்.

**கடகம்:** உத்தியோகத்தில் மாறுதல் உண்டாகும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை நிலவும். வழக்கு இழுபறி ஆகும். தாயின் உடல் நிலை பாதிக்கும். கொடுக்கல் வாங்கலில் அதிக கவனம்

## 17.05.09 முதல் 23.05.09 வரை

தேவை. வேலைப் பளு அதிரிக்கும். வீடு மாற்றம் உண்டாகும்.

**சிம்மம்:** நெருங்கிய நண்பர்கள் விட்டு விலகிப் போவார்கள். யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. பணக் கஷ்டம் இருக்காது. கல்வியில் அக்கறை செலுத்தவும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை.

**கன்னி:** யாரிடமும் வாக்குவாதம் தவிர்ப்பது நல்லது. கொடுக்கல் வாங்கலில் விழிப்புடன் இருப்பது நல்லது. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. வாகனங்களில் செல்லும்போது உஷார். கைப்பொருள் மீது கவனம் தேவை. நண்பர்கள் விலகிப் போவார்கள். திருமணம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும்.

**துலாம்:** இன்னும் சில வாரங்கள் கவனத்துடன் இருக்கவேண்டும். நீண்ட நாள் தொல்லைகள் கொடுத்து வந்த பிரச்னைகள் முடிவடைய சில காலம் ஆகும். வாகனத்தில் செல்லும் போது உஷார். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடவும்.

**விருச்சிகம்:** நண்பர், உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். கல்வி வளம் மேன்மை பெறும். திருமணம் கைகூடும். இல்லற வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. பொருளாதார சிரமம் இருக்காது. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் உண்டாகும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். உடல் நிலையில் சற்று கவனம் தேவை.

**தனுசு:** வராத நிலுவைகள் வந்து சேரும். மனஸ்தாபங்கள் விலகி நட்பு அதிகமாகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வீட்டில் சுபகாரியம் கைகூடி வரும். வீடு / மனை வாங்கும் நேரம் இது. குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். கடன் சுமை தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். தொழில் துறையில் நல்ல அபிவிருத்தி ஏற்படும்.

**மகரம்:** சுப காரியம் நிறைவேறும். பணக் கஷ்டம் இருக்காது. நண்பர் உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். திருமணம் கைகூடும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி கிட்டும். கடன் சுமை தீரும். வெளிநாட்டில் இருந்து நல்ல தகவல் வந்து சேரும்.

**கும்பம்:** வழக்கு வெற்றி பெறும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். கூட்டாளிகள் விட்டு விலகிப் போவார்கள். பூர்வீகச் சொத்து வந்து சேரும். மனச் சலனம் தீரும். பிள்ளைகள் இடம் மாறிப் போவார்கள். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வீடு / மனை வாங்க ஏற்ற காலம்.

**மீனம்:** படிப்பில் மேன்மை கிட்டும். நண்பர் / உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். வீடு, தொழில் மாற்றம் உண்டு. வேலைப் பளு அதிகரிக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும்.

**தஞ்சை பரத்வாஜ்**

# தசாவதார தர்பூசணி!

கோடைக் காலம். சாலையோரத்தில் வேன்களில் வந்திறங்குகிறது தர்பூசணி. மரத்தடி நிழலில் தற்காலிக அங்காடி உருவாகி விடுகிறது. தள்ளுவண்டிகளில் தர்பூசணிப் பழங்கள் அடுக்கப்பட்டு, வீதிகளில் விற்பனைக்கு வருகின்றன. சிறுவர் முதல் பெரியவர் வரை சுட்டெரிக்கும் வெயிலில் விரும்பிச் சுவைத்து உண்ணும் பழம் தர்பூசணி.

''நம் முன்னோர்கள் காலத்தில் இதற்கு, 'தசம் நீர்ப்பழம்' என்றே பெயர் இருந்திருக்க வேண்டும். அதுவே மருவி மருவி தற்போது 'தர்பூசணி' என்றாகி விட்டது. 'தசம்'னா பத்து. மனித உடலுக்குப் பத்து விதமான நன்மைகள் அளிக்கக்கூடிய, நீர்ச் சத்து நிறைந்த, உலகின் ஒரே பழம் தர்பூசணி!'' எனக் கூறுகிறார்.

குமாரமங்கலம் வடுகபட்டி கிராமத்தில், தர்பூசணி தோட்டம். பூசணிக் கொடி போல தரையில் படர்ந்துள்ளது, அடர்த்தியாக.

''இதனைத் தனிப் பயிராகவும் செய்யலாம். ஊடுபயிராகவும் செய்யலாம். நாங்கள் இதனைப் போட்டிருப்பது ஊடு பயிராக. நெல்லி, மா மரப்பயிர்களுக்கு இடையே. நெல்லி, மா மரக்கன்றுகள் நட்டு அது நல்லா வளர்ச்சி அடையற அஞ்சு வருஷம் வரைக்கும் அந்தத் தோட்டத்துல ஊடு பயிர் பண்ணலாம். விதை சாகுபடியைச் சேர்ந்தது தர்பூசணி. டிசம்பர் முதல் பத்து தேதிக்குள்ள விதை நடவு பண்ணணும். ஒரு குழியில மூணு விதை. ஒரு ஏக்கருக்கு நாலாயிரம் விதை. ஐம்பது நாள்ல பிஞ்சு வரும். விதை ஊன்றிய எண்பதாவது நாள்லேர்ந்து தர்பூசணி பழம் பறிக்கலாம். இந்தப் பழம் சாப்பிடுறவங்களுக்கும் பல நன்மைகள் தருது. இதைப் பயிர் பண்ணின மண்ணுக்கும் பல நன்மைகளைச் செய்யுது. மொத்தத்துல கோடைப் பருவத்துக்குனு கடவுள் நமக்களித்திருக்கும் அருமையான பழம்!'' எனப் பெருமைப்படுகிறார் ஆனந்தன்.

உடலுக்குப் பத்துவிதமான நன்மைகள்னா, அது என்னென்னங்கற கேள்வி வரலாம். முதல் பாயிண்ட். இதுபோல நீர்ச்சத்து நிரம்பிய பழம், உலகத்துல வேறெதுவும் இல்ல. வறண்ட கோடையில மனித உடல்ல நீர்ச்சத்து டக்கு டக்குனு கொறைஞ்சிரும். அதை ஈடுசெய்யறது தர்பூசணி. மூணு


ராஜ்குமார்


ஆனந்தன்

ரூபாய்க்கு ஒரு கீத்தா வாங்கி சாப்பிட்டுப் போயிடலாம். ''அதை ருசிச்சு சாப்பிடும் போது உதடுகளுக்கும், பற்களுக்கும் (ஈறு களுக்கும்), நாக்குக்கும் கெடைக்கிற ருசி அனுபவமே தனி. அத்தனை பரவசமா இருக்கும்'' என்கின்றனர் பள்ளி மாணவி களான அருள்மொழிதேவி, ஹேம மாலினி.

உடல் சூட்டைக் குறைக்குது. குளிர்ச்சி யைத் தருது. நம்மோட சுவாசத்தைச் சீர் பண்ணுது. கண் பார்வை நல்லாத் தெரிய, ஒரு காரணியா செயல்படுது. தொடர்ந்து சாப்பிடுறவங்களோட தோலின் வறட்சி நீங்கி, மினுக்குத் தன்மை அளிக்குது. பாதங்களை மிருதுவா ஆக்குது. செவப்பு கலரா உள்ள அதன் சதைப் பகுதிகளை முகத்தில் தேய்த்துக் குளிக்க, முகம் பொலிவு பெறுது. இதுல எந்த கெமிக் கலும் இல்லேங்கறதால பயப்படாம முகத்துல தேய்ச்சுக் குளிக்கலாம். இது எல்லாத்தையும்விட எப்பேர்ப்பட்ட தாகத் தையும் தணிச்சு, கோடை வறட்சியி லேர்ந்து நம்மை மீட்குது.

''தர்ப்பூசணியை ஊடுபயிராப் போடுற ஒரு தோட்டத்துல பல நன்மைகள். மண்ணுக்குப் போர்வை ஆகிடுது அதன் கொடி. மண்ணைப் பாது காக்குது. கொடி யின் வேர் முடிச்சுகள், நைட்ரஜன் எனும் சத்தினை வஞ்சனையின்றி மண்ணுக்குத் தருகின் றன. அதன் கொடிகளை அதே மண்ணில் மடக்கிப் போட்டு உழவு செய்கையில், மரப் பயிர்களுக்கு அடியுரமாக ஆகிப் போகிறது. விளைச்சலால நல்ல வருவாய் கெடைக்குது. ஒரு ஏக்கருக்கு நல்ல மகசூல் கண்டிருந்தா, எல்லாச் செலவும் போக ஐம்பதாயிரம் ரூபாய் லாபம் அள்ளித்தருது. எங்கள்ட்ட பெரிய வியாபாரிகள் வந்து கொள்முதல் பண்ண வந்தாங்க. நாங்க அவங்களுக்குத் தரலை. பொது மக்களுக் குக் கொறைஞ்ச விலையில கெடைக் கணும்னு, நாங்களே உழவர் சந்தைகள்ல கொண்டு போய் வித்துட்டு வர்றோம்!'' என்கிறார் திருச்சி வழக்குரைஞரும், தோட் டத்தின் உரிமையாளருமான ராஜ்குமார்.

செய்தி, சித்திரம் : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



* ஹேமமாலினி

* அருள்மொழிதேவி





# 30 ஆண்டுகள் = 9 ட்ரில்லியன் டாலர்

**ஸ்விஸ் வங்கியில் முடங்கிக் கிடக்கும் பல கோடி ரூபாயை வெளிச்சம் போட்டுக் காட்டியதில் முக்கியப் பங்கு பேராசிரியர் ஆர்.வைத்தியநாதனுக்கு உண்டு. சென்னையில் ஸ்விஸ் வங்கி பணத்தைப் பற்றி உரையாற்றினார். அவர் ஆற்றிய உரையிலிருந்து சில 'நறுக்' விஷயங்கள்:**

◆ ஸ்விஸ் வங்கியில் முடங்கிக் கிடக்கும் பணத்தை எப்படியாவது வெளியே கொண்டுவர வேண்டும் என கங்கணம் கட்டிக் கொண்டு களத்தில் குதித்திருக்கும் முக்கியமான உலக நாடுகள்: ஜெர்மனி, பிரான்ஸ், அமெரிக்கா மற்றும் இங்கிலாந்து. ஸ்விஸ் வங்கி கணக்கைப் பற்றி என்றுமே மௌனம் காத்த ஒரு நாடு நம் நாடுதான். ◆ 'அங்கிருந்து எல்லா பணமும் எடுக்கப்பட்டு விட்டால், ஸ்விட்சர்லாந்தின் பொருளாதாரம் என்னவாகும்?' போன்ற அடுக்கடுக்கான கேள்விகளை எனக்கு அனுப்புபவர்களில் பாதிப் பேர் சென்னையைச் சேர்ந்த சராசரி மக்கள்! ◆ நம் வருமான வரி அதிகாரிகள் zurichல் உள்ள இந்திய உணவகங்களுக்குச் சென்று பார்த்தாலே போதும். அங்கே இந்தியாவில் உள்ள அனைத்துப் பிரபலங்களையும் பார்க்கலாம். ஸ்விஸ் வங்கியில் கணக்கு வைத்திருப்பவர்கள்தான் zurich உணவகங்களுக்கு வருவார்கள் என்பதை நான் சொல்ல வேண்டியதே இல்லை. ◆ பிரிட்டிஷ்காரர்கள் 90 ஆண்டுகளில் ஒரு ட்ரில்லியன் டாலர் அளவு பணத்தைக் கொண்டு சென்றனர். நம் இந்திய அரசியல்வாதிகளோ 30 ஆண்டுகளில் ஒன்பது ட்ரில்லியன் டாலர் அளவுக்கு பணத்தை மிக வேகமாகக் கொண்டு சென்றனர். யார் கெட்டிக்காரர்? ◆ நாம் அனைவரும் ஒன்றுபட்டால் நிச்சயம் ஸ்விஸ் வங்கியில் முடங்கிக் கிடக்கும் பணத்தை திரும்ப இந்தியாவுக்குள் கொண்டுவர முடியும். நாம் அப்படிச் செய்யவில்லை என்றால் வருங்கால சந்ததியினர் முன் நாம் அனைவருமே அவமானத்தால் தலை குனிந்து நிற்கும் நிலை ஏற்பட்டுவிடும். மலர்ந்து வரும் இளைய தலைமுறை நம் நாட்டின் மீது நம்பிக்கை இழந்துவிடும்.

**- நளினி சம்பத்குமார்**

## நீங்கள் கேட்டவை

# தராசு


* இல்லாத தைரியம்

● மல்லிகா அன்பழகன், சென்னை-78

? 'சமூகப் பிரச்னையைப் படமாக்க எண்ணம் இருக்கிறது; ஆனால் தைரியமில்லை'' என்கிறாரே கமல்?

! உண்மைகளை உள்ளது உள்ளபடியும் பாரபட்சமின்றியும் சொல்ல அசாதாரண தைரியம் வேண்டும். இன்றைய, உணர்ச்சிகளைத் தூண்டும் அசத்திய அரசியல் சூழலில் கமல்ஹாசன் அச்சமும் தயக்கமும் காட்டுவதில் அதிசயமில்லை.

● இராசா பத்மநாபன், திருவையாறு

? வங்காளம் பிரித்தெடுக்க வகை தெரிந்த உங்களுக்குச் சிங்களத்தைப் பிரித்தெடுக்க சிரமம் என்ன?

! லட்சக்கணக்கான அகதிகள் இடம் பெயர்ந்து இந்தியா வந்ததன் காரணமாக, வங்கப் பிரச்னையால் இந்தியாவுக்கு நேரடி பாதிப்பு ஏற்பட்டது. மேற்கு பாகிஸ்தான் கிழக்கு பாகிஸ்தான் ஆகியன, பூகோள ரீதியில் ஒன்றாகாமல் தனித்திருந்தன. வேறு பல காரணங்களும் உண்டு. இலங்கையில் இன்று நிலவும் பிரச்னையை வங்க விடுதலைப் போருடன் ஒப்பிடுவது முற்றிலும் தவறு.

● எம்.சிவ சண்முகம், திருப்பூர்

? விடுதலைப் புலிகளைப் போலவே பாகிஸ்தானில் பயங்கரவாதிகளான தாலிபான்களும் மக்களை மனித கேடயங்களாகப் பயன்படுத்துகிறார்களே?

! அப்படி தாலிபான் இயங்கும்போது, அமெரிக்கா வீசும் குண்டுகளில் அப்பாவி மக்கள் நூற்றுக்கணக்கில் மடிகிறார்கள். அதை ஐ.நா. உள்பட, யாரும் தட்டிக் கேட்பதில்லை! இலங்கைத் தமிழர் விஷயத்தில் வைகோ ஒபாமாவிடம் முறையிடுகிறார்! எப்படியிருக்குக் கதை!

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? ''இத்தாலி சோனியாவை பாரத அன்னை என்று சொல்லும்போது, பிரபாகரனை 'அண்ணன்' என்று நான் குறிப்பிடுவதில் என்ன தவறு?'' என்று கேட்கிறாரே சீமான்?

! சோனியா எவ்வாறு பாரத அன்னை



# கோர்ட்டுக்குக் கோடை விடுமுறை?



* மாறாத கருத்து



* வெயிலின் தாக்கம்

அல்லவோ, அவ்வாறே பிரபாகரனும் சீமானின் அண்ணன் அல்ல! ஆக, இரண்டுமே தவறுதான். ஒரு தவறு, இன்னொரு தவறை நியாயப்படுத்தாது.

● இரா.சக்கரபாணி, மதுரை

? **விடுதலைப் புலிகள் அமைப்பை, தீவிரவாத அமைப்பு என்று விமர்சித்து அதற்கு எவ்வித ஆதரவும் தெரிவிக்காமல் இருந்த ஜெ, இப்போது விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாகத் தனி ஈழம் அமைக்க வேண்டும் என தம் கருத்தை மாற்றிக் கொண்டது பற்றி...?**

! இப்பவும் அவர் (ஜெ) விடுதலைப் புலிகளை ஆதரிக்கறதாச் சொல்லலைங்க...! நாடாளுமன்றத் தேர்தலில் அ.இ.அ.தி.மு.க. 40 தொகுதிகளிலும் வென்று, அவரே பிரதமராகி, முப்படைத் தளபதிகளுக்கும் ஆணையிட்டு, ஸ்ரீலங்கா மீது போர் தொடுத்து, அந்நாட்டை ஆக்ரமித்து, தமிழ் ஈழம் அமைப்பாராம்!

**☐ ரூ.150/- பரிசு பெறுபவர் :**

**பா. இசக்கிமுத்து, வெள்ளானைக்கோட்டை**

வாக்காளருக்குக் கதை சொல்றார். வாய் பிளந்து கேட்க வேண்டியதுதானே!

● மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்

? **அ.தி.மு.க. தனி ஈழம் எனக் கூறுவது நடிப்பாக இருந்தாலும் அதை ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், முதல்வர் கருணாநிதி நடிப்புக்குக்கூட கூறவில்லை; ஆதலால் அ.தி.மு.க. கூட்டணிக்கு வாக்களிப்போம் என்ற கொளத்தூர் மணி கருத்து பற்றி..?**

! தனி ஈழம் பற்றிய தமிழகத் தலைவர்கள் பேச்சு எல்லாமே நாடக டயலாக்தான். காரிய சாத்தியமானது அல்ல என்பதுடன் அபாயகரமான பேச்சும்கூட. அது இந்தியாவுக்குப் புதிய தலைவலிகளை உருவாக்கும்.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு ★

? **'வேட்பாளரைப் பற்றி எங்களுக்குக் கவலையில்லை. பணம் கொடுத்தால் தான் வோட்டுப் போடுவோம்' என்று வாக்காளர்கள் வெளிப்படையாகவே பேசும் நிலைமை ஆந்திராவில் உருவாகியுள்ளதே - இப்படியே போனால் ஜனநாயகம் பிழைக்குமா?**

! ஆந்திராவில் மட்டுமல்ல; நாடெங்கும் இந்தத் தொற்று நோய் பரவிவிட்டது. நோய்த் தடுப்பு நடவடிக்கை இந்நாட்டின் அறிஞர் பெருமக்களிடம்தான் உள்ளது. அவர்கள் தொடர்ந்து குறட்டைவிட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் சோகம்!

● மணிமாறன், திருவண்ணாமலை

? **இலங்கையில் 1500 ஹிந்து கோவில்கள் இடிக்கப்பட்டு அங்கே புத்தர் சிலைகளை இலங்கை அரசு நிறுவி வருவதாக வி.எச்.பி. தலைவர் அசோக் சிங்கல் கூறியிருப்பது குறித்து?**

! இலங்கைத் தமிழர் பிரச்னையை இலங்கை ஹிந்துக்கள் பிரச்னையாக

அடையாளப்படுத்துவதில் அவர் காட்டு கிற ஆர்வம் அலாதிதான். அவரது குற்றச் சாட்டு உண்மையெனில், அதை அமைதி யான முறையில் நிருத்தி அமைக்க அதே அளவில் ஆர்வம் காட்டி, எல்லா இந்தியத் தலைவர்களையும் ஒருங்கிணைத்துச் செயல்படட்டும். பாராட்டலாம்.

● கு.அருணாசலம், தென்காசி

**? இப்போதெல்லாம் கடை திறப்பது போல கட்சி தொடங்குகிறார்கள் என் கிறார் தி.மு.க. பொதுச்செயலாளர் அன்பழகன். கடை திறக்க முதல் வேண்டும். கட்சி தொடங்க...?**

! அரசியல் இங்கே கவர்ச்சி கலந்த கடை வியாபாரமாகி ரொம்ப நாளாயிடுச் சுங்க! ஒரே வித்தியாசம் - சாதா கடை வியாபாரத்தில் நியாயமான 10-15 சதவிகித லாபம் இருக்கும். அரசியல் கடை வியா பாரத்தில் லஞ்ச-ஊழல் வசதி காரணமாக, 100 சதவிகிதம் 200 சதவிகிதம் என்று கொள்ளை லாபம்.

● பா.இசக்கிமுத்து,
வெள்ளாளன்கோட்டை

**? கோர்ட்களுக்குக் கோடை விடு முறை தேவையா? கோடிக்கணக்கில் வழக்குகள் தேங்கிக் கிடக்கும் போது வெள்ளைக்காரன் காலத்து நடைமுறையைப் பின் பற்றுவது தேவை தானா?**

! பலமுறை இது தொடர்பாகப் பேசிவிட்டார் கள். முடிவெடுக்க வேண்டிய பொறுப்பும், நீதிமன்றத்திடம்தான் இருக்கிறது.

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

**? "குடும்பமே இல்லை என்பவருக்கு ஆடம்பர பங்களா எதற்கு?" என்று ஜெய லலிதாவை நோக்கி ஸ்டாலின் கேள்வி எழுப்பியுள்ளாரே? குடும்பம் இல்லை என்றால் எல்லோரும் குடிசையில்தான் வாழ்கின்றனரா?**

**★ ரூ.75/- பரிசு பெறுபவர் :**

**பவானி கிருஷ்ணா,
பெங்களூரு**

! சாதாரணமாகவே தேர்தல் சூட்டில் இதுபோன்ற அபத்தப் பேச்சுக்கள் அதிகமா கத்தான் இருக்கும். போதாக் குறைக்கு மே மாத கொளுத்தும் வெயிலில் தேர்தலை வைச்சுட்டாங்களா, உளறல்களுக்குக் குறைச்சலே இல்லை!

● எஸ்.ராமசாமி, ஈரோடு

**? போபர்ஸ் வழக்கிலிருந்து குவோத் ரோச்சி விடுவிக்கப்பட காரணம் காங் கிரஸ் சி.பி.ஐ.க்குக் கொடுத்த அழுத்தம் தான் என்று குற்றம்சாட்டப்பட, "எந்த கட்சி ஆட்சிக்கு வந்தாலும் சி.பி.ஐ. போன்ற அமைப்புகளின் மீது ஆதிக்கம் செலுத்தும்" என்று ராகுல் காந்தி கூறி யுள்ளாரே?**

! உண்மையை ஒப்புக் கொண்டதற் காகப் பாராட்டலாம். ஆனால், தவறான அணுகுமுறை என்பதால் அவரும் அவரது குடும்பமும் குடும் பத்தின் பிடியில் சிக்கி யுள்ள காங்கிரஸ் கட்சி யும் கடும் கண்ட னத்துக்கு உள் ளாகின்றன.



★ அலாதி ஆர்வம்!



★ கொண்டாடும் உறவு!

# அமிர்தம் சூர்யா

ஓய்ந்து போன தேர்தல் பிரசார மாய் 'ரிங்' அடித்து மௌன மானது. சசி மீண்டும் சித்தனோடு பேச முயற்சித் தான். தேர்தல் களத்தைக் காலி செய்து நகர்ந்த தலைவர்களைச் சுட்டிக் காட்டும் விதமாய் 'தொடர்பு எல்லைக்கு அப்பால்' என்றது தொலைபேசி. விக்கிரமாதித் தனைப் போல் மீண்டும் முயன்ற போது சித்தனின் பேச்சு இப்போது சசியின் காதுகளில் சாரலாய் விழுந் தது.

''வணக்கம் நான் சித்தன் பேசறேன்'' என்றதும், ''ஸார் வணக்கம் நான் சசி...'' என்று முடிக்கும் முன்பே, ''என்ன கொஞ்ச நாளா எந்த இலக்கியக் கூட்டத்திலேயும் ஆளைக் காணோம். எப்படி இருக்கே?'' என்றார் சித்தன்.

''ஸார் ஒரு பிரச்னை... உங்க உதவி வேணும்'' என்று மிக சன்னமாக வார்த்தை யைக் கவனமாக கோத்தபடி, ''அப்பா குடிக்கு அடிமையாகி உடம்பும் மனசும் பாதிச்சு குடும்பம் ரொம்பக் கஷ்டப்படுது. குடிநோய்க்கு இலவச சிகிச்சை கொடுக்கிற கவர்ன்மென்ட் ஹாஸ்பிட்டல் ஏதாவது இருக்கான்னு விசாரிக்கத்தான் உங்களோடு தொடர்பு கொண்டேன்'' என்றாள் சசி.

''வஞ்சனை இல்லாம வாரி வாரி ஊத்தும் அரசே, நோயில் இருக்கும்போது அது குடிநோய்க்கு உதவுதான்னு எனக்குத் தெரியல. இது ராஜாஜி காலமல்ல சசி. எனக்குத் தெரிந்து நிறைய சமூக அமைப்பு களும் தனியார் நிறுவனமும் அக்கறை எடுத்துச் செயல்படுது. அதுல முக்கிய மானது சென்னையிலுள்ள டி.டி.கே. மறுவாழ்வு மையமும், கோவை யிலுள்ள கஸ்தூர்பா காந்தி நினைவு



# இது ஒரு 'குடி' அரசு!



6

குடிநோய் போதை நீக்கும் சிகிச்சை மறுவாழ்வு மையமும். ஒரு விஷயம் தெரியுமா சசி? நான் டி.டி.கே. மையத்தில் தான் சிகிச்சை எடுத்தேன்'' என்றார்.

''சார் அப்ப நான் கேள்விப்பட்டது உண்மைதானா? இதை இவ்வளவு தைரியமா ஒத்துக்கறீங்க?''

''உண்மையைச் சொல்ல எழுத்தாளன் வெட்கப் படணுமா என்ன? என் வாழ்வின் கதையோட அந்த மையங்களைப் பற்றியும் சிகிச்சை பற்றியும் பேச உன்னோட அப்பாவையும் அழைச்சிட்டு வா சசி... விரிவா பேசலாம். இன்று மாலை அசோக்நகர் பூங்காவில் சந்திக்கலாம்'' - என்று வைத்தார் சித்தன். குடி என்னும் கூட்டுப் புழு பருவத்திலிருந்து பட்டுப் பூச்சியாய் மாறும் அப்பாவின் காலம் சமீபத்தில் இருப்பதாய் உணர்ந்தாள் சசி.

ஆயினும் 'இது ராஜாஜி காலமல்ல' என்று சித்தன் சொன்ன வரி மட்டும் விஸ்வரூபம் எடுத்து சசி முன் நின்றது. அந்தக் காலம் உயிர்பெற்று மறுசுழற்சி முறையில் மண்ணில் மலராதா என்ற ஏக்கம் மட்டும் மனத்தில் மலர்ந்தது. சேலம் மாவட்டத்தில் துவங்கி படிப்படியாக மாநிலம் முழுவதும் மதுவிலக்கை அமுல்படுத்திய ஆட்சியாளர் ராஜாஜி. இதனால் ஏற்பட்ட இழப்பை ஈடுகட்ட 'விற்பனைவரி' கொண்டு வந்தார்.

திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் இருந்த காலத்தில், மதுவிலக்கு என்ற கொள்கைக்காகவே 'விமோசனம்' என்ற பத்திரிக்கையை நடத்தினார் ராஜாஜி. கிராமம் கிராமமாகச் சென்று மதுவிலக்குப் பிரசாரம் செய்தார். காங்கிரஸ் தொண்டர்களும் ஆசிரமவாசிகளும் அதை இயக்கமாகவே செய்தனர். இன்றோ மதுவிலக்கு பிரசாரத்துக்குப் பதிலாக மது விற்பனைக் குறியீடுகளை உயர்த்துகிறது அரசு!

எண்ண ஓட்டத்தினூடே சசிக்கு ஒரு

கிராமிய கதையும் நினைவுக்கு வந்தது... ஒரு வனத்துக்குள் வகிடு எடுத்தாற் போல ஒற்றையடிப் பாதை. அதில் அழகிய தாசியொருத்தி இடுப்பில் கைக் குழந்தையோடு கள் பானையைத் தலையில் சுமந்தபடி நடந்து வருகிறாள். அவளின் இடுப்பில் சுருக்குப் பைபோல வாள் இணைந்திருக்கிறாள். காட்டின் மையப்பகுதியில் பிரம்மசரியத்தை (பெண்களை மனத்தாலும் தொடாத விரதம்) கடைப்பிடிக்கும் ஒரு வீரன் எதிரே வருகிறான். அவன் சுத்த சைவம். எதிரே வந்தவனை வழி மறித்த தாசிப் பெண், என்னிடம் இருக்கும் கள்ளை வாங்கிக் குடி அல்லது என்னை அனுபவி, இல்லாவிட்டால் எனக்கு இடையூறாயிருக்கும் இந்தக் குழந்தையை இந்த வாளால் கொன்று விடு. இதில் ஏதேனும் ஒன்றைச் செய்தால் தான் உன்னை விடுவேன்' என்கிறாள்.

'தாசியைத் தொடுவது தன் கொள்கைக்குப் பாவம். குழந்தையைக் கொல்வது தன் வாழ்வுக்கே மகாபாவம். மீதியிருப்பது தாசி தலையிலிருக்கும் கள் மட்டுமே.' அவன் யோசிக்கிறான். கள் ஒரு சைவ உணவு. நாமும் சைவம். எனவே கள் அருந்துவது மட்டுமே சரியான தேர்வு. அதுவும் இன்று ஒருநாள்தானே என்றெண்ணி கள்ளை வாங்கிக் குடிக்கிறான். முதலில் மயக்கம். இன்னொரு முறையும் குடிக்கிறான். போதையின் உச்சியில் வனமே சுழல்கிறது. அதில் அவனின் கொள்கையும் விரதமும் சுழன்று சுழன்று அவனை விட்டு விலகி வனத்துக்கு அப்பால் போய் விழுகிறது. தாசி தேடி வந்த சொர்க்கமாய்த் தோன்ற, கள் உடம்பில் காமத்தைச் செயற்கையாய்த் தூண்டி அந்துமீற வைக்கிறது. தாசியை நெருங்கி, தழுவி, அவளுடன் உறவு கொண்டிருக்கையில் இன்பத்துக்கு இடையூறாக இடைவிடாமல் வீறிட்டுக் கத்துகிறது அக்குழந்தை. இதென்ன சாத்தானின் ஓலம் என்றெண்ணி தாசியின் இடுப்பில் படர்ந்திருக்கும் வாளை உருவி, கத்தும் குழந்தையின் குரல்வளையில் நடுகிறான். எங்கும் அமைதி. சூரியன் அஸ்தமனமாவதை வனத்தில் இருள் வாசித்துக் காட்டுகிறது. அவனின் வாழ்வும் குறியீடாக அதை எதிரொலித்தபடியே முடிகிறது. போதை, பெண், கொலை இம்மூன்றையும் முதலில் வெறுத்தவன், போதைக்குப் பின் சர்வ சாதாரணமாய் மற்ற இரண்டையும் செய்து தன்னை மரணக் குழிக்குள் தள்ளிக் கொண்டான் என்று அக்கதை முடியும். மனத்தில் விரிந்த கதை முடிச்சாய் மாறி முற்றுப் புள்ளியாய் நிற்கையில், ''ஹாய் சசி என்ன சீரியஸான யோசனை?'' என்று கேள்வியால் உசுப்பினான் யாழினி முனுசாமி...

**(நாளை இவனும் உசுப்புவான்)**

> இன்று, மதுவிலக்கு பிரசாரத்துக்குப் பதிலாக மது விற்பனைக் குறியீடை உயர்த்தி நிர்ணயத்திருக்கிறது அரசு.

**எச்சரிக்கை: தற்கொலைக்கான வேது தவணை:**

'நியூரைடிஸ்' எனும் நரம்புத் தளர்ச்சியைத் தொடர்ந்து, 'பெப்டிக் அல்சர்' எனும் வயிற்றுப் புண் ஏற்பட்டு, அடுத்து கணையத்துக்குக் குறி வைக்கிறது மது. கணையத்தில் ரணம் ஏற்பட்டு பழுதடைவதை 'பான்கிரியாடைடிஸ்' என்பர். கணைய பாதிப்பு என்பதற்கு உடல் எமனின் பணயக் கைதி என்று பொருள். இனி எமனின் விருப்பம் தான்...



# லிம்கா சாதனை!



ஏசியா நெட் 657AMன் துபாய் ரேடியோவில் திருவனந்தபுரத்தைச் சேர்ந்த கிருஷ்ணவேணி, தொடர்ச்சியாக ஆறு வருடங்களுக்கும் மேலாக அதாவது 2222 நாட்கள் செய்திகள் வாசித்து ஒரு புதிய சாதனை படைத்துள்ளார். ''ஆறு வருடங்களாக எப்படி ஒரு நாள் கூட லீவ் எடுக்காமல் செய்திகள் வாசித்தேன் என்பது எனக்கே ஆச்சரியமாக உள்ளது. நிச்சயம் இதனை கடவுள் அருள் என்றுதான் கூறவேண்டும்'' என்கிறார் கிருஷ்ணவேணி. இவரது இந்தச் சாதனை லிம்கா புக் ஆஃப் வேர்ல்ட் ரெக்கார்டின் புதிய பதிப்பிலும் இடம்பெற்றுள்ளது. இதில் இன்னொரு ஆச்சரியம்... இவர் தமிழில்தான் செய்திகள் வாசிக்கிறார். ஏசியா நெட் 657AM மலையாள ரேடியோதான், முதன்முறையாக அரபுநாடுகளில் தமிழ்ச் செய்திகளை ஒலிபரப்புகிறது என்பதையும் கிருஷ்ணவேணி கூறுகிறார். திருவனந்தபுரம் விநாயக நகரில் குடும்பத்துடன் வசித்துவரும் இவருக்கு கின்னஸும் வசமாகட்டும்.

**- எஸ்.எஸ்.மணி**

---

**ரீடர்ஸ் ஸ்பாட்**

உங்கள் வீடுகளில் அதிக அளவில் கரப்பான் பூச்சிகள், எலிகள் உள்ளதா? உடனடியாக அவற்றை ஒழிக்க முயற்சி எடுங்கள். இல்லாவிட்டால், அவற்றின் மூலம் உங்கள் குழந்தைகளுக்கு ஆஸ்துமா, அலர்ஜி போன்ற நோய்கள் ஏற்படும் ஆபத்து உள்ளது. வீஸிங் எனப்படும் மூச்சுத்திணறல், கடுமையான காய்ச்சல், எக்ஸிமா எனப்படும் ஒவ்வாமை நோய் போன்றவை மூன்று வயதுக்கும் குறைவான குழந்தைகளுக்குப் பரவுவதற்கு கரப்பான் பூச்சிகளும், எலிகள் மூலம் வெளிப்படும் ஒரு வகை புரோட்டீனும் காரணமாக அமைவதாக, கொலம்பியா குழந்தைகள் சுற்றுப்புறச் சூழல் சுகாதாரமையத்தின் ஆராய்ச்சியாளர்கள் நடத்திய ஆய்வில் தெரிய வந்துள்ளது.

கரப்பான் பூச்சிகள், எலிகளால் உடல்நலத்துக்கு ஏற்படும் ஆபத்துகள் குறித்தும், உடல்நிலையில் ஏற்படும் அறிகுறிகள் பற்றியும் அவர்கள் ஆய்வு மேற்கொண்டு அறிக்கையை வெளியிட்டனர். வீட்டுக்குள் உருவாகும் ஒவ்வாமையில் கரப்பான் பூச்சிகளும், எலிகளும் முக்கியப் பங்கு வகிப்பது கண்டறியப்பட்டது. ஏற்கெனவே இந்த மையம் சார்பில் நடத்தப்பட்ட ஆய்வில் சுற்றுப்புறச் சூழல் மாசுகள் காரணமாக, குழந்தைகளுக்கு ஆஸ்துமா நோய் அறிகுறிகள் ஏற்படுவதாகத் தெரிவிக்கப்பட்டிருந்தது.

*(நெட்டில் சுட்டது)*

தகவல் : **தாண்டவக்கோன்**

## காக்க காக்க 'காக்ரோச்' காக்க



# தோழியா... காதலியா...?

'ஓடி ஓடி விளையாட ஓடிஓடி விளையாட வாடா- நீ ஓடிப் போகலாகாது ஓடிப் போகலாகாது வாடா...' நகுலன், சுனேனா, இருவரையும் 'மாசிலாமணி' படத்துக்காக, பெண்டை கழட்டிக் கொண்டிருந்தார் டான்ஸ் மாஸ்டர் சஜூன். இடுப்புக்கு ஓய்வுகொடுத்து சும்மா இருந்த நேரத்தில் நகுலன், சுனேனா ஜோடியோடு லகலக பேட்டி...

நகுலன், சுனேனா இருவருக்கும் காதல் பத்திக்கிச்சாமே?

**நகுலன் :** அய்யய்யோ ஆள விடுங்க சாமி, எங்களைக் காலி பண்ணுறதுக் குள்ளே ஒரு குரூப்பாதான் கிளம்பி யிருக்கீங்க! *(இல்லைன்னா இல்லைன்னு சொல்லு, இதுக்கு ஏன் இப்படி அலப் பறையைக் கொடுக்கறே...)*

நகுலன்னா... உங்களுக்குத் தோணும் முதல் விஷயம் என்ன?



அப்ப உண்மையிலேயே நகுலனை நீங்க காதலிக்கலையா?

**சுனேனா :** காதலிக்கறேன். ஆனா, அது சினிமாவுல! ***(கொன்னுட்டீங்க. ஆனா, உயிர் போகலை.)***

சுனேனாகிட்ட உங்களுக்குப் பிடிச்ச விஷயம்?

**நகுலன் :** அவங்களோட இன்வால்வ்மெண்ட்; என்கூட நடிக்கும்போது எங்க ரெண்டு பேருக்கும் இடையில் வொர்க் அவுட் ஆகும் கெமிஸ்ட்ரி; இதெல்லாம் பிடிக்கும் ***(ஆரம்பிச்சுட்டீங்களா...)***

அதென்ன கெமிஸ்ட்ரி?

**சுனேனா :** நான் ஃபிஸிக்ஸ் ஸ்டுடண்ட். அதனால கெமிஸ்ட்ரியைப் பத்தி எனக்கு அவ்வளவா தெரியாது.

***(இதென்ன ஸேம் சைடு கோல் போடறீங்க)***

நீங்க படப்பிடிப்புக்கு லேட்டா வர்றீங்களாமே?

**நகுலன் :** ஸார், இந்த நெருப்பு ஆரம்பத்துல யாரோ ஒரு புண்ணியவான் கிளப்பிவிட்டு, இன்னும் அணையாமே இருக்கு! இதுல உண்மையே இல்லை. ***(சமர்த்து, இப்படித்தான் பேசணும்)***

உங்க கனவு கேரக்டர்?

**சுனேனா :** போலீஸ். ***(அய்யோ ஆள விடும்மா... தமிழ்நாட்டு மக்கள் பாவம்.)***

அக்கா தேவயானி என்ன சொல்றாங்க?

**நகுலன் :** என்னோட இந்த வளர்ச்சிக்காக தினமும் கடவுளுக்கு நன்றி சொல்றாங்க. ***(அப்படியா..?)***

''ஷாட் ரெடி'' என்று டைரக்டர் குரல் கொடுத்ததும் பட்சிகள் ரெண்டும் பட்டென்று பறந்தன.

**- சேகர்**

**சுனேனா :** அவரோட சிரிப்புதாங்க, அதிக டேக் வாங்கினாலும் சிரிப்பார்; ஒரே டேக் வாங்கினாலும் சிரிப்பார். ***(காதல் ஸீன்லதான் அதிக டேக் வாங்கறாராமே... உண்மையா?)***

சுனேனா உங்களுக்குத் தோழியா.. காதலியா..?

**நகுலன் :** ஆஹா.. கிளம்பிட்டீங்களா... சினிமா மேல சத்தியமா தோழிதாங்க. ***(ஆரம்பத்துல அப்படித்தான் சொல்வீங்க...)***

● **திவ்யா, சென்னை**

**ஆண்டவன் தேர்தலில் நின்றால் என்ன ஆகும்...?**

வேட்பாளராகப் பதிவுசெய்யச் செல்லும் ஆண்டவனுக்கும், தேர்தல் அதிகாரிக்கும் கீழ்க்கண்ட சம்பாஷணைதான் நடக்கும்...

தேர்தல் அதிகாரி: உங்க பேர் என்ன?

**ஆண்டவன் :** !!!!

**தே.அ:** நீங்க பிறந்த தேதி... உங்க வயசு என்ன...?

**ஆண்டவன்:** !!!!!

**தே.அ:** உங்க தேசம்... ஐ மீன் நேஷனாலிட்டி...?

**ஆண்டவன்:** !!!!!

**தே.அ:** என்ன சார் எந்தக் கேள்வியைக் கேட்டாலும் கிரேசியா முழிக்கறீங்களே...! நீங்க யாரு...?

**ஆண்டவன் :** ஆண்டவன்.

**தே.அ:** ஸாரி... இது ஆண்டவனுக்கான எலெக்ஷன் இல்ல... ஆளப் போறவங்களுக்கான தேர்தல்... நீங்க போகலாம். நெக்ஸ்ட் யாருப்பா...?

**ப்யூன்:** சைத்தான் சார்..!

● **ஆர். ரங்கராஜன், தி.நகர்**

**ராமாயணக் கூனி 'கூனிக்குறுகிய' சம்பவம் ஏதாவது உண்டா...?**

ராமாயணக் கூனிக்கு, கிருஷ்ணாவதாரத்தில் கண்ணன் முதுகில் ஒரு போடு போட்டு அவள் கூனலை நிமிர்த்தி விடுகிறார். ''இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண - பின்வால் நிமிர்த்தி விடல்...''

● **ஆர்.ஆர்.தமன், அரும்பாக்கம்.**

**பெண்டாட்டி என்பது கணவனை Bend எடுத்து ஆட்டி வைப்பதால் ஏற்பட்ட காரணப் பெயர்தானே...?**

அதனால்தான் அவளை நினைத்து கன



விலும் நடுங்கும் அவனுக்கு கணவன் என்ற காரியப் பெயர் வந்ததோ! ஹஸ்பேண்டாட்டி என்றும் வைத்துக் கொள்ளலாம்.

● என்.கோமதி,

கிரேஸி தம்பி! செஸ் போர்டுல இருக்கற ராஜா, ராணி, சேவகன், இவங்கள்லாம் எந்த நாட்டைச் சேர்ந்தவங்க?

'செஸ்கோஸ்லேவியா'. சுத்தத் தமிழில் சதுரங்கப்பட்டினம்... ராஜா பேர் 'விஸ்வ நாதன் ஆனந்த்.'

● மு. மதிவாணன், அரூர்.

சினிமா தியேட்டரில் கிடைக்கும் கைத்தட்டலுக்கும், நாடக மேடையில் கிடைக்கும் கைத்தட்டலுக்கும் என்ன வித்தியாசம்...?



# கிரேஸியைக் கேளுங்கள்

# தேர்தலில் நிற்கும் ஆண்டவன்!

சினிமா தியேட்டர் சாதம்; நாடக மேடை பிரசாதம். இந்த பிரசாதம் என்னும் அருள் கிடைத்தால் சாதம் என்ற பொருள் கிடைக்கும்.

● எடக்காடு பி.சேகர், ஊட்டி.

டியர் கிரேஸி...! தங்களின் தொலைபேசி எண்ணைச் சொல்ல முடியுமா...?

நிச்சயமா... நீங்க போன் பண்ணுங்க. கண்டிப்பா சொல்றேன்.

● பா.அசோக், விருதுநகர்.

கிளுகிளுப்பா கலைநயத்துடன் ஒரு 'காதல்-கவிதை' கூறுங்களேன்...?

பெண்பாவை பற்றி வெண்பா...

''வெட்கத்தில் தொட்டாற்சிணுங்கி
அவள் - யாரும்
பக்கத்தில் இல்லையென்றால்
பாய்ந்தோடி- சொர்க்கத்தின்
வாசல் திறந்திடுவாள் வாத்சா
யனர்விரலை
நாசிமேல் வைப்பார் நிமிர்ந்து''

● ஜி.ஆர்.ராகவன், காகிதபுரம்.

உங்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டால் இந்தியத் தலைவர்களில் யாருக்கு நோபல் பரிசு தருவீர்கள்?

'நோ-பல்' பொக்கைக் கிழவருக்கே என் 'நோபல்'!

● த.சத்தியநாராயணன், அயன்புரம்.

சோத்துக்குத் தாளம் போடுகிறான் என்று இசையைச் சம்பந்தப்படுத்துவதேன்...?

சாப்'பாட்டுக்கு'த் தாளம் என்பதால் இருக்குமோ...?



# வாசிக்கத் தூண்டும்

வேரித்தாஸ் ஆசிய வானொலி தமிழ்ப்பணி ஒலிபரப்பு, பிலிப்பைன்ஸ் தலைநகர் மணிலாவில் இயங்கி வருகிறது. தினசரி காலை அரைமணி நேரம். மாலை அரைமணி நேரம். அதன் ஒலிபரப்புக்கு ஆசியநாடுகளில் பல்லாயிரக்கணக்கான நேயர்கள். சமீபத்தில் திருச்சியில் வேரித்தாஸ் ஆசிய வானொலியின் உறவுச் சங்கம விழா நடைபெற்றது. தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலிருந்தும் அதன் நேயர்கள், தங்கள் சொந்தச் செலவில் வந்திருந்து கலந்து கொண்டனர். அவர்களில் சிலரைச் சந்தித்தோம்...



**அ. அப்துல்காதர், தாம்பரம்:**

**வி**ளாத்திகுளம் அப்துல்காதர் என்கிற பெயரில் வேரித்தாஸ் ஆசிய வானொலி, இலங்கை தொடு வானம் ஒலிபரப்புகளில் தினசரி என் குரல் தொடர்ந்து ஒலித்துக் கொண்டேயிருக்கும். அந்த அளவு வானொலி ஆர்வம். பர்மா அகதிங்க நாங்க. அரியநாயகிபுரம் (விளாத்திகுளம்) கிராமத்துல ஸ்கூல்ல படிச்சப்ப பஞ்சாயத்து வானொலியை இயக்கற வேலை. பார்ட் டைம் மாதிரி. மாசம் பதினைஞ்சு ரூபா சம்பளம். 1964லிருந்து பொதுவா வானொலி கேக்கறேன். எங்கன சுத்தி அலைஞ்சாலும் நம்ம கூடவே வர்ற பேச்சுத் தோழன் வானொலி.

**பார்த்திபன், காஞ்சிபுரம்:**

முப்பது வருஷமா வானொலி கேக்கறேன். பதினேழு வானொலி நிலைய ஒலிபரப்போட நேயர் நான். தனியார் கம்பெனில சேல்ஸ்மேன். வேரித்தாஸ் மூணு வருஷமா கேட்டு வர்றேன். உள்ளங்கை அகல வானொலிப் பெட்டியிலும் எல்லா வகை வானொலி ஒலிபரப்பையும் கேக்கலாம். உலகளாவிய வலைத்தளத்திலும் கேக்கலாம். என்ன? நீங்களும் ஒரு நேயரா மாறக் கிளம்பிட்டீங்களா? வருக. வருக.



**கீதா முருகானந்தம், திருவைகாவூர்:**

**ம**னிதநேய உணர்வுகளை மக்கள் மனங்களில் விதைக்குது வேரித்தாஸ். பொதுவா வானொலி கேக்கற பழக்கம் உள்ளவங்க, பத்துப் பதினைஞ்சு வானொலிக்கு நேயரா இருப்பாங்க.

# வானொலி!

நிலையங்களுக்கு மேல எடுக்கும். கைக்கு அடக்கமானது. மனசுக்கு நெருக்கமானது. என் படிப்புக்கு இடையூறு இல்லாதது. அதனால வானொலிதான் என்னோட பெஸ்ட் சாய்ஸ்.



தொலைக்காட்சி அதிகம் பார்க்க மாட்டாங்க. முக்கியமா சீரியல் பார்த்து, கண்ணைக் கசக்கிக்க மாட்டாங்க. இப்ப எங்க வீட்ல குழந்தைகளையும் வானொலி நேயர்களாத்தான் வளர்த்து வர்றோம்.



**பொருநை பாலு, திருநெல்வேலி நகரம்.**

'என் வீட்டுக்காரர் என் பேச்சைக் கேக்கறத விட, ரேடியோ கேக்கறதுதான் அதிகம். பேசாம அவரு ரேடியோவையே கல்யாணம் கட்டியிருக்கலாம்' இதுதாங்க என்னோட இல்லத்தரசி எனக்குத் தர்ற சர்ட்டிஃபிகேட்.



**ஜெய் சக்திவேல், அடையாறு:**

'சர்வதேச வானொலி' மாத இதழ் நடத்தி வர்றேன். அஞ்சு வருஷமா அச்சு இதழா வெளிவருது. அதுக்கு முன்னாடி கையெழுத்துப் பிரதியா வெளியிட்டேன். அப்படீன்னா... எங்களோட வானொலி ஆர்வத்தைப் புரிஞ்சுக்கங்க. இந்த நவீன உலகத்திலும் சரி. உலகம் எங்கிலுமாக முகம் அறியாதவங்களோட எளிய நட்பு கிடைக்க ஒரு பாலமா இருக்கறது வானொலி.



**எஸ்.பாபு, ஆசிரியர், புதுக்கோட்டை.**

வானொலி நேரடி உரையாடலில் பங்கேற்கும் நேயர் நான். எதிர் முனையில பேசுறவங்க என்ன கேட்டாலும், அதுக்குப் பதில் சொல்ல நம்மை ரொம்பவே தயார் பண்ணிக்கணும். அதுக்கு நெறைய புத்தகங்கள் படிக்கணும். இப்படி ஆரம்பிச்சது, வீட்ல ஒரு நூலகம் வைக்கற அளவுக்குப் புத்தகங்கள் சேர்ந்துடுச்சு. நான் ஆசிரியப் பணியில் இருந்தாலும், என்னை நெறைய புத்தகங்களை வாசிக்கத் தூண்டியதுல வானொலிக்கும் பங்கு உண்டு.



**மஜீதா, கோவை, பி.டெக் (இறுதியாண்டு)**

நான் கையில வெச்சிருக்கறது, சீனத் தமிழ் வானொலி பரிசா தந்தது. இதுல நூற்றைம்பது

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# 'பரு'வுக்குத் தடா!

பெண்கள் மிக அதிகமாகக் கவலைப்படுவது முகப்பருக்களை நினைத்துத்தான்! என்ன டிரெண்டியா ட்ரஸ் போட்டாலும் இப்படி பிம்பிள்ஸ் வந்து ஃபேஷனுக்கும் அழகுக்கும் எதிரியா இருக்கே... என உள்ளுக்குள் மருகிக் கொண்டேயிருப்பார்கள். டயட் சரியாக இருந்தால் பருக்களிலிருந்து விடைபெறலாம். உணவில் வைட்டமின்கள், கால்ஷியம் கண்டிப்பாக இருக்க வேண்டும். பழங்கள் நிறையச் சாப்பிட வேண்டும். சில எளிய டிப்ஸ், முகப்பருக்களைப் போக்க...

● எப்போதுமே முகத்தை க்ளீனாகப் பளிச்சென்று வைத்திருக்கவும். அழுக்கு இருந்தால் பாக்டீரியா 'இதோ வரேங்க' என ஓடி வந்து உட்கார்ந்துவிடும்.

● பருக்களைக் கிள்ளவோ, தேய்க்கவோ கூடாது. டோண்ட் டச்!

● மேக்கப் போடக்கூடாது. க்ரீம்களில் கெமிக்கல் கலந்திருப்பதால் நிலைமை டேஞ்சர்தான். ஸோ, ஸ்டே அவே..

● மேக்-அப் போட்டேதான் ஆகணும் என பிடிவாதப் பெண்ணாக இருந்தால், ஆயில் ஃப்ரீ, ஆன்டி-பாக்டீரியல் கன்சீலர் யூஸ் பண்ணவும்.

● பருக்களிடம் பொறுமை காக்கவும். ஒரே நாளில் காணாமல் ஓடிப் போகாது. டைம் பிடிக்கும்.

● பருக்களின் மீது ஐஸ் பேக் போட்டால் வலியிலிருந்து விடுதலை கிடைக்கும். சிவந்து, வீங்கியிக்கும் பருக்களில் ஐஸ் ஒத்தடம் கொடுத்தால் நிம்மதியாக இருக்கும்.

● ஆலோ வெரா (சோற்றுக்கற்றாழை) சோப் உபயோகிக்கவும்.

● ஆப்பிள் சிடார் வினிகர் கொஞ்சமாக பஞ்சில் ஊற்றி, பருக்களின் மீது ஒற்றி யெடுக்கவும்.

● பஞ்சில் சிறிது எலுமிச்சை ஜூஸை விட்டுப் பருக்களின் மீது வைத்து 5 நிமிடங்களுக்குப் பிறகு முகம் கழுவவும். சிலருக்குப் பயங்கரமாக எரியலாம். அவர்கள் எலுமிச்சை ஜூஸில் தண்ணீர் சேர்த்துத் தடவவும்.

● தேன் தடவவும். பாக்டீரியாவை அழிக்கும் பவர் தேனுக்கு உண்டு.

● டூத்பேஸ்ட் கொஞ்சம் எடுத்து (பேஸ்ட் வெரைட்டி; ஜெல் அல்ல) பருக்களின் மீது பொட்டுப் பொட்டாக வைக்கவும். காய்ந்தவுடன் முகத்தைக் கழுவவும்.

● பப்பாளிக்காயின் ஜூஸ் எடுத்து பருக்களில் தடவி வந்தாலே அவை ஓடிவிடும்.

● உருளைக்கிழங்கை தோல் சீவி, துருவிக் கொள்ளவும். ஒரு சுத்தமான துணியில் போட்டு மூட்டையாகக் கட்டி முகம் முழுவதும் 5 நிமிடங்களுக்குக் குறையாமல் ஒற்றிக்கொண்டிருக்கவும். பிறகு முகம் கழுவவும். உருளையை வில்லையாக கட் பண்ணி நேரடியாகவும் முகத்தில் வைக்கலாம்.

# உடையழகு...நடைபழகு...



● பிம்பிள் பார்ட்டி பொண்ணுங்க தண்ணீர் நிறைய குடிக்கணும். ஃப்ரூட் ஜூஸ், பழங்கள், காய்கறிகள் நிறைய சேர்த்துக்கணும்.

● கடலை எண்ணெயில் எலுமிச்சை ஜூஸ் கலந்து பருக்களின் மீது தடவி பதினைந்து நிமிடங்களுக்குப் பிறகு கழுவவும்.

● நன்கு பழுத்த தக்காளியை அரைத்து முகத்தில் தடவி, அரைமணிக்குப் பிறகு கழுவவும். பிம்பிள் பறந்து ஓடிவிடும்... ஜாலி!

● நெய், வெண்ணெய், ஸ்வீட் போன்றவை உங்களுக்கு எதிரி. தாலிபான் லிஸ்டில் சேர்க்கவும்.

● தலைமுடியை அழுக்கில்லாமல் அடிக்கடி ஷாம்பூ, சீயக்காய் கொண்டு அலசி பளிச்சென்று வைத்திருக்கவும்.

● உடைகளும் பளிச்சென்று இருக்க வேண்டும். அழுக்கு, வியர்வை இரண்டுமே பருக்களின் தோஸ்த்.

● ஸ்ட்ரெஸ் இருக்கக்கூடாது. கூலாக இருங்கம்மா!

● தினமும் முகம் கழுவி விட்டுத் தான் படுக்கப் போக வேண்டும்.

● ஓவர்நைட்டில் மாயமாக பருக்கள் மறைந்துவிடாது. பொறுமையாகச் செய்தால் ஒரு சில நாட்களில் ரிசல்ட் தெரியும்.

- லதா சேகர்

# எதிர்காலம் என்னவாகும்?

தமிழ்நாட்டில் இந்தப் பாராளுமன்றத் தேர்தல், முப்பது வருடங்களாக இருந்து வந்த ஒரு இமேஜை உடைத்திருப்பதாக அரசியல் நோக்கர்கள் கருதுகிறார்கள். தமிழ் நாட்டில், தி.மு.க., அ.தி.மு.க. என்ற இரு கழகங்களின் தோள்களில் மாறி மாறி சவாரி செய்து, வெற்றிபெற்று வந்தது காங்கிரஸ். மக்களவைத் தேர்தலைப் பொறுத்தமட்டில் காங்கிரஸோடு கூட்டணி சேர்ந்தால் பெரும்பான்மை இடங்களைப் பெற முடியும் என்று கழகங்கள் கருதின. ஆனால், இந்தப் பாராளுமன்றத் தேர்தலைப் பொறுத்தமட்டில் தி.மு.க.வுக்கு, காங்கிரஸ் ஒரு சுமையாகப் போய்விட்டது. பதினாறு இடங்களில் போட்டியிட்ட காங்கிரஸ், மூன்று இடங்களுக்கு மேல் வெற்றி பெறாது என்பதுதான் பல கருத்துக் கணிப்புகள் சொன்ன சேதி. இந்த அளவுக்கு காங்கிரஸுக்கு எதிரான ஒரு அலை அடித்ததற்கு முக்கியக் காரணம், இலங்கைத் தமிழர் தொடர்பான காங்கிரஸ் நிலை.

1971ல் காங்கிரஸுக்கு பத்து பாராளுமன்ற இடங்கள் கொடுத்து, அதனுடன் கூட்டணியைத் துவக்கியவர் கலைஞர். அதன் பிறகு 1977, 1984, 1989, 1991, 1996, 1999 ஆகிய தேர்தல்களில் அ.தி.மு.க.வுடன் கூட்டணி கண்டது காங்கிரஸ், 1980, 2004 ஆகிய தேர்தல்களில் தி.மு.க.வுடன் கூட்டணி. இடையில் 1996 மற்றும் 1998ல் த.மா.க.வுடன் தி.மு.க.வுக்குக் கூட்டு. 1977ல் இந்திரா காங்கிரஸும், ஸ்தாபன காங்கிரஸும் தனித்தனி கூட்டணியில் முப்பத்து மூன்று தொகுதிகளில் போட்டியிட்டாலும் பெற்ற வாக்கு 40 சதவிகிதம். இப்போது கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாக காங்கிரஸின் வாக்கு சதவிகிதம் குறைந்தது மட்டுமல்லாமல், கழகங்கள் அதற்குக் கொடுக்கும் இடங்களும், படிப்படியாகக் குறைந்துவிட்டன. 2004ல் காங்கிரஸுக்கு பத்து இடங்கள்தான். இந்தத் தேர்தலில் தி.மு.க. கொடுத்த இடங்கள் பதினாறு. இப்போது காங்கிரஸின் வாக்கு வங்கி தமிழகத்தில் பதினைந்து சதம்தான். எதிர்வரும் காலத்தில் தமிழகத்தில் தன்னைத் தக்கவைத்துக்கொள்ள நிறையவே போராட வேண்டியிருக்கிறது. மேலும் மத்திய ஆட்சியைப் பொறுத்தவரை இனி ஒரு தனிக்கட்சி ஆட்சியைப் பிடிப்பது சாத்தியமல்ல என்ற நிலை வந்துவிட்டது. மாநிலக் கட்சிகள் அதிக அளவில் போட்டியிட்டு தில்லிக்குச் செல்லும். இந்த நிலையில் தேசியக் கட்சியான காங்கிரஸ் கழகங்களால் ஒதுக்கப்படும். இலங்கைப் பிரச்னை போன்ற பிரச்னைகளில் மத்திய அரசின் செயல்பாடுகள் மாநில வாக்காளர்களிடம் தாக்கத்தை உருவாக்குவதால் இரு கழகங்களும் ''இனி வேண்டாம் உன் சகவாசம்'' என்று காங்கிரஸை விட்டு ஓடவே வாய்ப்புகள் உண்டு.

- ப்ரியன்



# Vivekananda Vidya Kala Ashram

Gurukulam Residential School, Affiliated to C.B.S.E

"M.S. Jain Gyana Vihar"

Sivanvoil P.O. Thiruvallur District, Tamilnadu. Pin. : 602 024

email: vvka@vesonline.org, ves@vesonline.org

## AN IDEAL RESIDENTIAL SCHOOL FOR BOYS NEAR CHENNAI

Located in serene rural surroundings. Pollution free air and plenty of water.

Experienced and dedicated teachers residing in the campus impart value-oriented education, rooted in Bharatiya tradition and culture. Instructional programme includes prayer, yoga, drill, games, karathe, instrumental music, swimming etc. besides academic classes from class VI to X under CBSE stream with choice of Hindi/Tamil as second language. Track record of 100% pass in CBSE examination.

Fully equipped dormitory type hostel accommodation with wholesome vegetarian food and fresh milk from Goshala in the campus.

The School is promoted by Vivekananda Educational Society which has over 35 years of experience in establishing and running many reputed schools in and around Chennai city.

Admission open to classes VI, VII, VIII and IX for the session commencing from June 2009. Prospectus and application forms may be obtained from:

**The Secretary,**
**Vivekananda Educational Society,**
"Sri Paduka", Krishna Apartments,
H-Block, 1053 Poonamallee High Road, Chennai 600 084.
Phone: (044) 23452120, 23452121, or 9884400191, 93848 04488.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.